ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு ௰ } மேய்கண்டான் யாண்டு-ஏாகூ சித்திரைத் திங்கள் 1932ஞ ஏப்ரல்மூ—மேமூ { பரல் ௪

திருச்சிற்றம்பலம்

## திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம்

### திருநீலகண்டப்பதிகம்

காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினை யாலெயின் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுது நாமடியோந்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம்.

பதவுரை:—

காவினை யிட்டும்=(வெயிலில் வழி நடந்து வரும் உயிர்களுக்கு நிழலுதவ) மரச்சோலைகளை வைத்தும்

குளம் பல தொட்டும்=(நீருதவப்) பல நன்னீர்க் குளங்கள் வெட்டியும்

கனி மனத்தால்=(இவ்வாறு செய்து வரும் அறச்செயல்களால் உயிர்களிடத்து அன்பு வளர்ந்து) குழைந்து உருகும் உள்ளத்தால்

நாம் அடியோம்=அடியோங்களாகிய நாம்

இருபொழுதும்—காலை மாலை என்னும் இரண்டு காலங்களிலும்

எவினையால்—(மேரு மலையை வில்லாக வளைத்து) அம்பினால் எய்யும் செயலால்

எயின் மூன்றெரித்தீர்—முப்புரங்களை அழித்தீர் (என்று சொல்லித் துதித்து)

பூவினைக்கொய்து—பூக்களைப் பறித்து (அப்பூக்களால்)

மலரடி போற்றுதும்—பூப்போல் மெல்லிய அடிகளை வணங்குவோம்

தீவினை வந்து தீண்டப்பெறா—(அதனால்) முன்செய்த தீவினையின் பயனாகிய துன்பங்கள் எம்மை அணுகாவாம்

திருநீல கண்டம்—"அவ்வினைகட்கு இவ்வினையாம்" என்ற முதற் பாட்டில் இதற்குக் கூறப்பட்ட பொருளைப் பார்க்க.

விளக்க உரை:—

காவைத்தல் குளந்தொடுதல் ஆகிய இரண்டு அறச்செயல்கள் இங்கே கூறப்பட்டன. இனம் பற்றி அன்னம் அளித்தல் கல்வி கற்பித்தல், தங்குமிடம் (சத்திரம்) கட்டல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல் முதலிய அறங்களும் கொள்ளப்படும்.

இவ்வறங்களில் ஒன்றேனும் சிலவேனும் பலவேனும் ஒருவர் தமது பொருள் அளவிற்கேற்ப இம்மை மறுமைப் பயன் குறியாது உயிர்களின் மேல் வைக்கும் அருள் குறித்துச் செய்யின் அச்செயல்களினால் அவரது உள்ளம் அன்புப்பெருக்கம் அடைந்து உயிர்களுடைய இன்ப துன்பங்களுக்கு உருகிக் குழையும்படியான கனிவை அடையும். அவ்வுள்ளக் கனிவுடன் அவர் இறைவனுக்குச் செய்யும் உண்மை வழிபாடு அவர் முற்பிறவிகளில் உயிர்களிடத்து அன்பு இன்றிச் செய்த தீவினை வலியைக் கெடுத்து அதன் பயனை இலதாகச் செய்யும் என்பது இப்பாட்டின் கருத்து. உயிர்கள் மேல் அன்பு இன்றிச் செயப்படும் இறைவன் வழிபாடும் இறைவனை மறந்து செயப்படும் அறங்களும் பயனிலவாம்.

கனிவால் என்பது போற்றுதும் என்கிற வினையைத் தழுவி நிற்கிறது.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# போர்க் கருவிகள் போந்த புதுமை

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

(சிலம்பு ௧, பரல் ௮, ௩௯௫-ம் பக்கத் தொடர்ச்சி)

## வெடி மருந்து வகை

வெடிமருந்து வேட்டையாடுவதற்கும், போர் புரிவதற்கும் பலவகையிலும் பயன்பட்டு வருகிறது. ஆயினும் அது எரியும் பொழுது மட்டற்ற புகையை யுண்டாக்குவதால் போர் நிகழ்ச்சி களில் குறைபாடு உண்டாகின்றது. எவ்வாறெனில் புகை தோன்றுமிடத்தில் எதிரியின் துப்பாக்கிகளோ பீரங்கிகளோ இருக்கவேண்டுமென அது எளிதிற் புலப்படுத்தி விடுகிறது. எனவே புகையின்றி வெடிக்கும் ஒரு கலவையைக் கண்டுபிடிக்க வேண்டியது கட்டாயமாயிற்று. பிரான்ஸ் பெருநாட்டில் அத் தகையதோர் வெடி மருந்தைக் கண்டுபிடித்து அதைக் கையாள் கின்றார்களென்றும் அதனால் குண்டுகளும், வெடிச்சிக (Shells) ளும் எங்கிருந்து வருகின்றனவென்று தெரியாதபடி வந்து வெடிக்கின்றன என்றும் செய்தி எட்டுகிறது.

ஆனால், வெடி மருந்து ஏன் புகைய வேண்டுமென்று கேட் டாலோ, அது செம்மையாக எரிவதில்லை யாதலினாலேயே யென்றே விடை யளித்தல் வேண்டும். செம்மையாக எரியா ததோ மருந்துக் கலவை செம்மையாக அரைபடாமையினா லேயே யாகும். எனவே கலவை நன்றாக அரைக்கப்பட்டுச் சேர்க்கப்பட்டிருந்தால் வெடிமருந்து நன்றாக எரியும் என் பதும், நன்றாக எரிந்தால் புகை யுண்டாகாது என்பதும் எளிதிற் போதருவனவாம்.

## டைனமைட் என்னும் படுவெடி

இனி, இவ்வாறு புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட புகையா வெடிமருந்துகளில் 'நைட்ரோ கிளிஸரைன்' என்று முன்னர் குறிக்கப்பட்டதே மிகச் சிறந்தது. கிளிஸரைனைக் கொண்டு செய்யப்படும் நைட்ரோ கிளிஸரைனில் கரிச்சத்தும், மிகுதி யான நீர்வளியும், ஒருசிறிது உயிர்வளியும் இருக்கின்றன.

இவை ஒன்றோடொன்று ஒருங்கே சேர்ந்திருத்தலோ டன்றிச் செம்மையாகவுங் கலந்திருக்கின்றன. கரிச்சத்தும் நீர்வளியும் உயிர்வளியுடன் கலக்க நேரிட்டால் சூட்டை யுண்டாக்கும் என்று முன்னர்க் கண்டோம். ஆனால் அவ்வாறு கலக்க இடமில்லாதவாறு கிளிஸரைனில் அவை மூன்றும் இயல்பிலேயே நன்றாகக் கலப்புற்றிருக் கின்றமையால் கிளிஸரைன் மட்டும் தனியாக வெடிமருந்தாகப் பயன்படுவதற்கில்லை. ஆயினும் ஒருசிறிது தீப்புளிப்பையும் கந்தகப் புளிப்பையும் அத்துடன் சேர்த்தால் இரண்டு புதிய கூட்டுகள் உண்டாகின்றன. ஒன்று நீரும்; மற்றொன்று கரிச்சத்து, நீர்வளி, மிகுந்த உயிர்வளி, ஒரு சிறிது 'சவுக்கடி' யெனத் தகும் தீவளி ஆகிய ஒரு கூட்டும் ஆகும். இவ்விரு கூட்டுஞ் சேர்ந்ததே நைட்ரோ கிளிஸரைன் என்பது.

இவ்வாறு கலப்புப் பெற்ற நைட்ரோ கிளிஸரைன் மிகவும் பெரியதொரு தீங்கைப் பயக்கவல்ல வெடிமருந்தாகும். எவ்வாறெனில், இக் கலவையுள் இருக்கும் சிறுபகுதியான தீவளி, ஒரு சிறிது புறத்தாக்கு ஏற்பட்டாலும் உடனே கலவையைத் தூள் படுத்திப் பெரிய வெடியை யுண்டாக்கிவிடும். இவ்வாறு கையினற் றெட்டாலும் வெடித்துத் தீங்கைப் பயப்பதாயிருந்த இதைக் கையாளுவது முதலிற் கடினமாகவே யிருந்தது. புகழ்பெற்ற நோபல் துரைமகனர் "கீஸல்கோர்" என்ற ஒருவித மண்ணை அதனுடன் கலந்து அதன் வேகத்தை மட்டுப் படுத்தி வேண்டுங்கால் வெடிக்கும்படியான முறையைக் கண்டு பிடித்த பின்னரே அது பயன்றருவதாயிற்று. "கீஸல்கோர்" என்ற மண்ணுடன் கலந்த நைட்ரோ கிளிஸரைன் கலவையே "டைனமைட்" என்று தற்காலம் வழங்கும் படுவெடிப் பொருளாகும். டைனமைட் என்ற பெயர் அந்த நோபல் துரைமகனர் சூட்டியதே.

### வெடி பஞ்சு

இனி, 'கன் காட்டன்' என்று ஆங்கிலத்திற் கூறப்படும் 'வெடி பஞ்சு" என்ற மற்றொரு புதிய வெடி பொருளை நோக்கு

வோம். "ஆ, இதென்ன விந்தை! பஞ்சுக்கும் வெடிக்கும் என்ன கலப்பு! மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடி போடுவது போலிருக்கிறதே! பஞ்சு ஒரு கெடுதியும் பயக்க முடியாததொரு பொருளாயிற்றே" என்று கேட்கலாம். "நான் படும்பாடு சிவனே உலகர் நவிலும் பஞ்சு தான் படுமோ?" என்று அல்லற் படுதலுக்கு எடுத்துக் காட்டாய்த் தேர்ந்து எடுத்தாளப் பட்ட பஞ்சு பெரும் அல்லல் விளைப்பதற்குரிய கருவியாய் மாறுவது அறிவாராய்ச்சியின் மேம்பாடே யாகும். ஒரு தீங்கும் பயவாத கிளிஸரைனை ஒருசிறிது தீவளி சேர்ந்து எப்படி டைனமைட் என்ற படுவெடியாக மாற்றுகிறதோ, அப்படியே இப் பஞ்சையும் அது வெடிபஞ்சாக மாற்றி விடுகிறது. பஞ்சில், கரியும், நீர்வளியும், உயிர்வளியுஞ் சேர்ந்த "செல்லு லோஸ்" என்ற கலவைச் சத்து இருக்கிறது. இது தன்னள வானே எக்காலத்தும் வெடிக்க முடியாததொரு கலவை யாகும் வெடிக்க முடியாத தொன்றெனவே ஒரு தீங்கும் பயவாத தென்பதையும் உடன் உணரலாம். ஆனால் "நீரைக் கெடுக்க நாணலை" யிடுவது போல இதன் தீங்கு பயவாத நீர்மையைக் கெடுக்க ஒரு சிறிது தீவளியைச் சேர்த்தால் போதும்.

இதை யெப்படிச் சேர்க்க முடியும் என்பதைப் பார்க்கலாம். நூல் நூற்றுக் கழிக்கப்பட்ட (cotton waste) "கழி பஞ்சு" சிறிதெடுத்து அதைக் கந்தகப் புளிப்பும் தீப்புளிப்பும் சேர்ந்த ஒரு கலவையிற் றோய்த்தால் பஞ்சிலுள்ள செல்லு லோஸ் என்ற சத்து "நைட்ரோ செல்லுலோஸாக" மாறி விடு கிறது. கிளிஸரைன் எவ்வாறு நைட்ரோ கிளிஸரைனாக மாறிய தாக முன்னர்க் காட்டப்பட்டதோ அவ்வாறே தானிஃதும் பஞ்சை எடுத்துத் தோய்த்தால் மட்டும் போதுமா என்றால், போதாது; இன்னும் சில சிறு வேலைகள் செய்யவேண்டும். ஆயினும் அவற்றிற் கெல்லாம் பஞ்சைத் தோய்த்தலே முக்கிய மானதாகும். இவ்வாறு தோய்த்தபின் பஞ்சைப் பிழிந்துவிட் டுத் துண்டு துண்டாக அதைக் கிழித்து ஒவ்வொரு துண்டை யும் வில்லையாகத் தட்டிவிட வேண்டும். இவ்வாறு செய்வதில் அது வெடிக்கும் என்ற அச்சமே வேண்டுவதில்லை யாதலால்

இதை ஒரு சேமமான வெடி யென்றே கூறலாம். அவ்வில்லை கள் காயாமல் ஈரமாக இருக்கும் வரையில் வெடிக்குந் தன் மையே அவற்றிடங் கிடையாது. காய்ந்த பிறகு ஒரு வில்லை யைக் கீழே வைத்து அதை ஒரு சம்மட்டி கொண்டடித்தாலும் அடிபட்ட இடத்தில் மட்டுமே "குப்"பென எரிந்து அணைந்து விடும். அவ்வில்லையைத் தீயிற் கொளுத்தினாலும் எரியுமே தவிர வெடிப்பதில்லை. ஆனால் அதை ஒரு குழாய் போன்ற கருவி யில் வைத்துக் கெட்டித்து அதனருகே (fulminate of mercury) இரச வெடியைக் கொண்டு வெடிக்கச் செய்தால் அவ் வெடிபஞ்சு வெடித்துச் செல்லுந் தன்மையை ஈண்டு வரைய முடியாது. ஒரு சதுர அங்குலத்திற்கு 160 டன் வேகத் துடன் அது வெடிக்கிறது என்று கண்டுபிடிக்கப் பட்டிருக் கிறது. வெடிமருந்தின் வேகத்தைப் போன்று நான்கு மடங்கு கொண்டது இது என்பது எளிதில் அறியப்படும். ஆகவே அது விளைக்கும் தீங்கின் அளவும் முறையே உய்த்துணரப்படும்.

கீல்வெடி

கில் காய்ச்சுங்கால் வாலையிலிருந்து ஒருவித புகைப் பொருள் வந்து குளிர்ந்து கருநிறமுற்று நீர்ப்பொருளாக மாறு கிறது. இந் நீர்ப்பொருளி லிருந்து "கோல்டார் நாப்தா" "பென்ஸீன்" "நைட்ரோ பென்ஸீன்" "டோலூன்" "கார் பாலிக் ஆஸிட்" முதலிய பொருள்களும் "லிடைட்" என்ற புகழ்பெற்ற வெடி பொருளும் உண்டாக்கப்படுகின்றன. இறுதி யிற் குறித்த லிடைட் என்பதே கீல்வெடி யாகும்.

திரிவெடி

நைட்ரோ கிளிஸரைனையும் வெடிபஞ்சையும் "ஏஸி டோன்" என்ற ஒரு கலவைப் பொருளிற் போட்டு ஒரு சிறிது "வாஸிலைன்" என்ற சாந்தைச் சேர்த்தால் அவை ஒன்றாய்ச் சேர்ந்து கலந்து மெழுகைப்போல் ஆகிவிடுகின்றன. அம் மெழுகைச் சிறு துளையுள்ள ஒரு கலத்தினிற் பெய்து அழுத்தி னால் அது அத்துளை வழியே திரிதிரியாக வெளி வருகிறது. அதுவே "கார்டைட்" என்ற திரிவெடி யாகும்.

இன்னும் பலதிறப்பட்ட வெடி பொருள்கள் அகன்ற அட்டைகள் போன்ற உருவங்களோடு கூடியனவாயும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைப்பற்றி எழுதப்புகின் விரியும் என அஞ்சி விடுக்கின்றோம்.

ஆ! இயல்பில் இகழ்ந்து ஒதுக்கப்படும் மண்ணும், சாலைகளில் ஊற்றப்படும் கீல் என்ற "தாரு"ம், காற்றிற் பறக்கும் பஞ்சும் மக்கள் தம் எண்ணங்களை மண்ணாக்கி, அவர்கள் உடலைக் கருக்கி, உயிரைப் பறக்கடிக்கும் பலதிறப்பட்ட வெடி பொருள்களாக மாறிவிடும் புதுமையே புதுமை!

---

# மனைவாழ்க்கையும் புதல்வர்ப்பேறும்

[திரு. கி. குப்புசாமி முதலியார் அவர்கள்]

[சிலம்பு ௰, பரல் ௩, ௱௧௭-வது பக்கத் தொடர்ச்சி]

இவை யெல்லாங் கேட்ட மாணாக்கர், 'எம்பேராசிரிய! முன்னர் மனைவாழ்க்கையைக் கூறுங் காலத்து பழியஞ்சிப் பொருள் தேடிப் பகுத்து உண்பானுக்கு வாழ்க்கை வழி யெஞ்சுவது எக்காலத்து மில்லை யென்றீர். ஈண்டும் வாழ்க்கைத்துணை நலத்துள்ளும், நன்மக்கள் பேறு என்றீர்கள். இதனால் யாங்கள் உணர வேண்டுவது வாழ்க்கை வழி யென்னும் புதல்வர்ப் பேறே ஓர் தலைவனுக்கும் தலைவிக்கும் சிறந்த பொருள் போலும்?' என்று கேட்டலும், 'மக்காள், புதல்வர்ப் பேறு எல்லார்க்குங் கிடைப்பதோ? அதனினும் நன்மக்கள் பேறு எளிதில் கிடைப்பதோ? மனைவாழ்க்கையுள் நடுவு நிலைமை யுடையார்க்குக் கிடைக்குமே யன்றி ஏனையோர்க்குக் கிடைக்கா. இது கருதியன்றோ,

"தக்கார் தகவில ரென்பது அவரவ
ரெச்சத்தாற் காணப் படும்"

என்று கூறியதுமாகும். ஈண்டும் புதல்வரைப் பெறுதல் என்பதனுள்ளும்,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்லபிற"

என்றதூஉம். இதற்கு உரையெழுதிய பரிமேலழகர் "ஒருவன் பெறும் பேறுகளுள் அறியவேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதலல்லது, பிற பேறுகளை யாம் மதிப்பதில்லை" என்று பெருமிதமாக எழுதினர். அன்றியும் "அறிவறிந்த என்றதனால் மக்கள் என்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது" என்று பறையறைந்தனர். இதுகேட்ட மாணாக்கர், 'என்னை! என்னை!! பெண் ஒழித்து நின்றதென்றீர். அவர்க்கு ஓர் உரிமையுமில்லைபோலும். நிலவுலகத்துத் தோன்றிய மானுடயாக்கை தாங்கிய மக்கள் யாவரும் பிறப்பொத்து இருக்கவும், எற்றுக்குப் புதல்வர்க்கே சிறப்புக் கூறுகின்றீர்' என்னலும், ஆசிரியர் 'தந்தை, தாய், தலைவன் கற்பிக்கக்கூடிய நிலையில் நின்று வாழ்க்கைக்குத் துணையாக நிற்கும் மகளிர் தாமே ஒன்றை அறிவதற்கு இல்லையாதலாலும், தந்தை தாயை விட்டு நீங்கித் தலைவனிடத்துச் சென்று அவன்வழி நின்று தந்தை தாயர்க்கு யாதொரு சம்பந்தமுமில்லாது செல்லுகின்ற பெண்கள் தாய் தந்தையர்க்கு ஒரு பொருளாக நின்று உதவி செய்வதற்கு இல்லையாதலால், வழிவழி நின்று உடனிருந்து உடனுண்டு எல்லா நன்மை தீமைகளையும் அனுபவித்து இறக்கும் வரையும் பிதிர்க்கடன் செய்யும் புதல்வரைப்போல் ஒரு பொருள் உண்டோ? ஏனைய பொருள்களெல்லாம் அழிந்துபோகும் பொருள்களாதலால் அழியாப்பொருளாகிய புதல்வரை 'வாழ்க்கைவழி' யென்றனர். ஈதறியாது மயங்கி நன்னெறி விலகித் தீநெறிச் செல்கின்றார் கூற்றை விலக்குதற்கே,

"எழுபிறப்பும் தீயவைதீண்டா பழிபிறங்கா
பண்புடை மக்கட் பெறின்"

என்றனர். இதற்கு உரை எழுதவந்த பரிமேலழகன், "வினை வயத்தாற் பிறக்கும் பிறப்பு எழின் கண்ணும், ஒருவனைத் துன்பங்கள் சென்று அடையா; பிறரால் பழிக்கப்படாத புதல்வரைப் பெறுவானாயின்" என்றும், கருத்துரையில் "அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச்

செய்யும் புதல்வனைப் பெறுவானாயின் என்றதாயிற்று'' என்றும் கூறினர். இதனால் நாமறிவது ஒருவன் செய்த தீவினையானது அவன் மக்கள் செய்யும் நல்வினையால் தேய்ந்து நன்மையடைதற்கு ஆகின்றது என்று உணர்ந்தோம். பிறந்த குடியை விட்டு வேறொருவனுக்குக் கற்பிக்கின்ற மனைவி தன் தந்தை தாயர்க்கு யாதொரு கடமையுஞ் செய்தற்கு இல்லாது தன் தலைவன் கோத்திரத்துக்கே உரியளாயிருப்பதால் பழிக்கக் கூடாத ஆண்மக்களைப் பெறுவதே பெறுதற்கரிய பொருளாகும். அது கருதியே,

"தம்பொருளென்ப தம்மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்''

என்று கூறினர். அப்புதல்வர் தேடிய பொருள் தம்மை நோக்கி அவர்கள் செய்கின்ற நல்வினையினால் தம்மிடத்து வரும் ஆதலால் என்க. ஈதெல்லாங்கேட்ட மாணாக்கர் 'இல்வாழ்வானொருவன் புதல்வரைப் பெறுவதைக் காட்டிலும், வேறு பொருள் அடையவேண்டுவதில்லையென்றும், அப்பிள்ளைகளால் தாஞ்செய்த தீவினைகளும் மாய்ந்துபோகுமென்றும் மறுமைப் பயன் உணர்ந்தோம். இம்மைப் பயன் எதுவோ?' என்னலும் அம்மக்கள் இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் உள்ள சோற்றை ஒருவன் உண்பானாயின் அது சுவையால் சாவா மருந்து என்னும் அமுதத்தைக் காட்டிலுஞ் சிறப்புடையதாக இருக்கும். அதுவன்றியும் அம்மக்கள் வாய் நிரம்பாத மழலைச் சொற்களைக்கேட்ட காலத்துச் செவிக்கு இன்பமாயும், அவர்கள் கற்றறிந்த பிறகு பேசுஞ்சொல் மனத்திற் கின்பமாயும், அவர்கள் தம் உடலைத் தீண்டுங்காலத்து உடலுக்கின்பமாயும் இருக்குமென்றும், அம்மக்களது மழலைச்சொல்லைக் கேளாதவரே 'குழலோசை இனிமையுடையது யாழோசை இனிமையுடையது' என்று கூறுவார் என்றும், கேட்டவர் கூறார் என்றும் இம்மைப்பயன் ஈதெனக் கூறுவார்,

"அமிழ்தினு மாற்றவினிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்''

என்றும்,

"மக்கள் மெய்தீண்ட லுடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

என்றும்,

"குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"

என்றும் வரையறுத்துக் கூறினர்.

இனி, கிடைத்தற்கரிய புதல்வர்ப்பேற்றை யடைதற்கு, தந்தையானவன் எவ்வித அறத்தைச் செய்தல் வேண்டும்? இவ்வுலகத்து பொருளன்றோ வேண்டுவது? பொருள்தேடிப் புதைத்து வைத்தல் வேண்டுமோ? கல்வியுடையனுயாக்கல் வேண்டுமோ? என்று வினவுவார்க்குப் பதில் கூறுவார்போன்று, பொருள் நிலையற்றதாதலால் அது முற்றும் பயன் தருதல் இல்லையாதலாலும், அப்பொருளே புதல்வர்க்குப் பின்னர்த் துன்பந் தருவதற்கு இடமாகுமாதலாலும், பொருள் தேடுவித்தல் நன்மையாகா என்பது அறிவித்தற்கு,

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தியிருப்பச் செயல்"

என்று கூறித் தந்தையின் கடனை யெடுத்துக் காட்டினர். இவ்வாறு நல்ல மக்கள் பிறத்தலால் தந்தைக்கு மாத்திரம் இருமைப் பயனையுந் தருவதற்குத் தகுதியுடையவராகின்றனரேயன்றி, உலகத்து மக்கள் ஏனையோர்க்கு யாதேனும் பயன் உண்டோ? என்னும் ஐயத்தை நீக்கும் வண்ணம்,

"தம்மில் தம்மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது"

என்றனர். அதாவது கல்வியறிவுடைய மக்களால் பெற்ற தந்தையடையும் பயனைக்காட்டிலும் பெரிய இன்பத்தை அறிவுடையோர் கண்டு இன்புறுவர் என்று தந்தையைக் காட்டிலும் உலகத்தவர்க்கு நல்ல புதல்வர்களால் வரும் பயனை யெடுத்தோதினர்.

இனி, இத்துணையும் அறிந்தோம். 'பெரும்பொழுது தவங்கிடந்து' பெற்ற தாய்க்கு ஏதேனும் இம்மக்களால் பய-

னுளதாகுமோ?' என்று கேட்பார்க்குப் பதில் கூறுவார் போன்று,

> "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோனெனக் கேட்ட தாய்"

என்று அருளினர். இதற்கு உரை வரையவந்த பரிமேலழகர், "தன் மகனைக் கல்விகேள்விகளால் நிறைந்தானென்று அறிவுடையோர் சொல்லக் கேட்டதாய், தான் பெற்ற பொழுதை மகிழ்ச்சியினும் மிக மகிழும்" என்றும், "கவானிற் கண்கண்டபோது உவகையினும், சால்புடையனெனக் கேட்ட சிறப்புவகை பெரிதாகலின் பெரிதுவக்குமெனவும், பெண்ணியல்பால் தானுக அறியாமையிற் கேட்ட தாய் எனவும் கூறினர். அறிவுடையார் என்பது வருவிக்கப்பட்டது; சான்றோர் என்றற்கு உரியவர் அவராகலின் தாய் உவகைக்கு அளவு இன்மையின் அஃது இதனுல் பிரித்துக்கூறப்பட்டது" என்றனர். இத்திருக்குறள் உலகியல் வழக்கிற்கு மிகுதியும் பொருந்தியதாகவே காணப்படுகின்றது. அறிவுடையோர் சொல்லக்கேட்ட தாய் என்றமையால், தானுகவே அவைக்குச் சென்று தன் மகன் பேசும் சொற்களைக் தனது பெண்ணியல்பால் தானுகவே கேட்டு அறிவதற்கு இல்லை" என்றமையால், பண்டைக் காலத்து உலகியல் வழக்கு பெண்கள் அவைக்குச் செல்வதில்லை என்பது போந்த பொருளாயிற்று. அறிவுடையோர் சொல்லக்கேட்ட தாய் என்றமையால் தம்மில்லத்து வரும் நல்லாசிரியர் முதலியவர்களால் சொல்லக்கேட்குந் தாய் என்பது பொருளாயிற்று. தான் பெற்ற பொழுது அடைந்த மகிழ்ச்சியைக் காட்டிலும் மிகுதியும் மகிழும் என்று கூறிய பரிமேலழகர் பெற்றபொழுது என்பது எப்பொழுது என்று படிப்போர்க்கு ஐயம் நிகழாவண்ணம், "கவானிற் கண்கண்டபோது உவகையினும்" என்று தெள்ளத் தெளிக்கும் தமிழால் எழுதினர். இதனை,

> "வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
> கவான் மகற்கண்டு தாய்மறந் தாங்கு"

என்னும் நாலடியே நிலைநாட்டும்.

இனி, முடிந்தது முடித்தலாக நல்வினையின் பயனால் அடைந்த மகனொருவனால் தந்தைக்கு வரவேண்டிய நன்மைகளிற் சிறந்தது இதுவேயென்று எடுத்துக் காட்டுவார்,

"மகன் தந்தைக்காற்று முதவி இவன்தந்தை
என்னோற்றான்கொல் என்னுஞ் சொல்"

என்று புதல்வன் கடனை யெடுத்துக் காட்டினார். இத்திருக்குறளால் கல்வியறிவுடையனாக ஆக்கிய தந்தைக்கு மகன் செய்யுங் கைம்மாறு அவன் அறிவு ஒழுக்கத்தைக்கண்ட அறிவுடையோர், 'இவன் தந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவஞ் செய்தானோ' என்று புகழ்தல் வேண்டும் என்று கூறியதால் மகன் ஒருவன்,

"கற்கக் கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்னுந் திருவாக்கின்படியே கற்றல் வேண்டுமென்றும், கற்ற அளவே நின்று தனக்கும் உலகத்தோர்க்கும் நன்மைகளைச் செய்ய வேண்டுமென்றும் அறிந்தோம்.

இனி, இச்சொற்பொழிவின் கருத்தாவது, இந்நிலவுலகத்துத் தோன்றிய மகனொருவன் அடையும் பயனை யடைதற்கு முதலாகச் செய்யவேண்டிய அறம், மனைவாழ்க்கையென்னும் இல்லறமென்றும், அவ்வில்லறத்தை நிகழ்த்துங்கால் நூல்வல்லவர்கள் விதித்த வண்ணம் பெற்றதோர் வாழ்க்கைத்துணையாகிய மனைவியோடு இருந்து நிகழ்த்துதல் வேண்டுமென்றும், தான் அவ்வாறு செய்து போதலோடு நில்லாது பின்னும் உலகத்துக்கு நற்பயன் உண்டாக நல்ல பிள்ளைகளைப் பெறவேண்டுமென்றும் எடுத்துக் கூறுவதேயாகும்.

---

# மங்கை பங்கன்

[மகிழ்நன் எழுதியது]

## (முதற் பகுதி)

மங்கை பங்கன், மாதிருக்கும் பாதியன், அர்த்தநாரீசுரன் எனும் சிவனுக்குரிய ஒரு பொருட் பல பெயர்களால் குறிக்கப் படும் உண்மைகளை விரிவாய் ஆராய்ந்து விளக்கும் நோக்கத் துடன் இஃது எழுதப்படுகின்றது. மங்கை பங்கன் என்ற தொடரை, மங்கையின் ஒரு பங்காய் அமர்ந்தவன் என்றாவது, மங்கையைப் பங்காகக் கொண்டவன் என்றாவது பொருள் செய்து கொள்ளலாம். முதற் பொருளில் மங்கைக்குத் தலைமை யும், இரண்டாவது பொருளில் சிவனுக்குத் தலைமையும் உண்டா கின்றது. அர்த்தநாரீசுரன் என்றால், பாதி ஒரு பெண்ணாய் அமைந்த கடவுள் என்பது பொருள். (அர்த்தம்=பாதி, நாரீ= பெண், ஈசுரன்=கடவுள்) பெண்ணும் ஆணும் பொருந்தி இலங் கும் இவ்வுருவம் பெரிதும் வியத்தற்குரியது. இத்தகைய ஓர் உருவத்தை வேறு நாடுகளிற் காண்பதரிது.

ஈண்டு எடுத்துக்கொண்ட மங்கைபங்கன் என்ற சொற்றொட ரில் மங்கை என்ற சொல் முதலில் நிற்பதால், இவ்வாராய்ச்சியின் தொடக்கத்திலேயே, பெண், ஆண் என்று தெய்வங்கள் வகுக் கப்படும் முறை யாதென்று வினவுவது நன்று. நாவினுறை நங்கை எனப்படுங் கலைமகளைப் பெண் தெய்வத்திற்கு ஓர் எடுத் துக் காட்டாகக் கொண்டு, மேல் எழுப்பிய வினாவிற்கு விடை தேடலாம். நீண்ட பழக்கத்தின் பயனாக, நாவிற் பிறக்கின்ற பேச்சு நமக்கு மிக எளியதாகத் தோன்றுகின்றது. மக்கட் கூட் டம் குழவி நிலையிலிருந்த காலத்து, நாவைக் கொண்டு ஒலிகளை உண்டாக்குவதும், உண்டாக்கிய ஒலிகளைக்கொண்டு கட்புலன் செவிப்புலனாகாத எண்ணங்களைப் பிறர்க்கு விளங்கச் செய்வ தும், பெரியதொரு விந்தையாக இருந்திருக்கவேண்டும். 'பல்' என்ற சொல்லிலுள்ள இரண்டொலிகளுஞ் சேர்ந்து, அவற்றால்

குறிக்கப்படும் பொருளை எவ்வாறு தோற்றுவிக்கின்றன என்பதை விளக்கிக் காட்டக்கூடிய புலவனொருவனும் இல்லை. இங்ஙனம் கருதப்புகின் மொழி என்பது அறிதற்கரிய ஒரு மறையாகும். மிகப் பழைய காலத்தே மக்களது அறிவுந் திறமையும் பேச்சில் வெளிப்பட்டனவே யன்றி எழுத்திற் புகவில்லை. பேச்சும் பாடுந் திறமையும் முதிர்ந்தபின் எழுத்தும் நூலும் வந்தன. பண்டை நாள் நூல்களெல்லாம் வாய்ப்பாடமாக நெடுநாள் ஓதப்பட்ட பின்னரே ஏட்டிற் பதிக்கப் பெற்றன. ஏடும் எழுத்தும் வருமுன் கல்வி என்பது நாவில் மாத்திரம் வெளிப்பட்டது. அரிய கருத்துக்களும் இனிய பாடல்களும் நாவலர் வாயிலிருந்து வெளிப்பட்டதை விரிந்த கண்களுடன் வியந்து கேட்ட தொல்லுலக மக்கள் அவற்றிலொரு தெய்வத் தன்மையுண்டென்று கொண்டு, அத்தெய்வத் தன்மையை நாவிலுறை நங்கை என்றனர்.

நாவன்மையில் தெய்வத் தன்மை கண்டது ஒக்கும்; அதில் பெண் தன்மை வந்தவகை யாது? என்ற கேள்வி இப்பொழுது பிறக்கின்றது. இதற்கு மறுமொழி கூறுதற்கு முன், பிறநாட்டார் இதுபற்றி எக்கருத்துடையவரா யிருந்தார் என்று பார்ப்பது நமக்குப் பயனளிக்கக் கூடும். ஐரோப்பாவின் இக்கால அறிவுவளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் அடிகோலியோர் கிரேக்கர்கள் (The Greeks) ஆவர். கல்வி, அறிவு, நாவன்மை முதலிய திறமைகளின் உருவமாக இவர்கள் ஒரு தெய்வத்தைத் தொழுதனர். இது 'பாலஸ் அத்தினி' (Pallas Athene) எனும் ஒரு பெண் தெய்வம். கிரேக்கர்களுக்குப் பன்னூற்றாண்டுகளுக்குப் பின்னர் உயர்நிலை எய்தி உலகாண்ட உரோமர்கள் (The Romans) இம்மங்கையை மினர்வா (Minerva) என்ற பெயருடன் வணங்கினர். ஆதலின், கல்வியைப் பெண்ணாகக் கொள்ளுமொரு உளப்பான்மை வேறு பழைய நாடுகளிலும் இருந்ததென்பது விளங்குகின்றது. வெப்ப தட்பங்களில் வேறுபட்டு, இந்தியாவிற்குச் சாலச் சேய்மையிலுள்ள நாடுகளிலும், இங்கு நாம் கருதுகின்ற கல்விக்கும் பெண்ணுக்குமுள்ள தொடர்பு தோன்றுவதால், இவ்விரண்டிற்கும் உள்ள இயைபு

இயற்கையாகவே உண்டாகும் ஒன்று என்று நினைக்கவேண்டிய தாகின்றது.

பேச்சினும் பாடலிலும் உள்ள பெண் தன்மை யாது? அழகும் நயமும் மென்மையும் நுண்மையும் பெண்ணிலும் பாட்டிலும் ஒக்க உள. இருதிறத்திலும் அணியுண்டு, உருக்குந் திறனுண்டு, பயிலப்பயில இன்பம் பயத்தலும் உண்டு. ஆதலின், எழுத்தும் நூலுந் தோன்றுமுன், மக்களது நுண்ணிய அறிவும் அழகிய சொல்லும் நாவை நீக்கி வேறு வழிகளில் வெளிப்பட முடியாதிருந்த காலத்தில், கல்வியை நாவிலுறை நங்கையென்று மன்பதை கொண்டாடி யிருக்கவேண்டும். தமிழை நாம் அன்னையென்று சொல்கின்றோமே, தமிழ்த்தாய் வணக்கம் பாடுகின்றோமே, அவள் யாண்டு உளள். தமிழன்னை உறையுமிடம் தமிழர் நாவன்றோ? பெண் தன்மை குறித்து மற்றும் சில கூறுதும்.

வையகத்திலுள்ள உயிர்களும் பொருட்களும் வெவ்வேறு தன்மையுடையனவாய் அமைந்துள்ளன. சில வன்மையுடையன; சில மென்மை யுடையன; வெப்பமுடையன சில; தட்பமுடையன சில; கைப்புடையன சில; இனிப்புடையன சில; இன்னும் பல தன்மைகளும் உள. இவற்றுள், மென்மை தட்பம் இனிமை முதலியவை பெரும்பாலும் யாவராலும் விரும்பப் படுகின்றன. வன்மை வெப்பம் முதலியவை வியத்தற்கும் அஞ்சுதற்கு முரியன. உலக வழக்கில் விரும்பத் தக்கனவற்றை பெண்ணோடு சேர்த்துப் பேசுவது இயல்பு. இதை மேலும் விளக்குதும்.

பெருங் காட்டிற்பற்றிப் பரவுகின்ற தீயைப்பற்றி யொரு புலவன் பாடத் தொடங்கி, அது யாவற்றையும் நக்கி யழிப்பதை நவின்று வருங்கால், இயல்பாகவே அவன் அதற்கு மனிதத் தன்மை கொடுத்துப் பேசுவான். இங்ஙனம் அதற்கு மனிதத் தன்மை வகுக்குங்கால், ஆண் தன்மை அமைப்பதோ, பெண் தன்மை அமைப்பதோ என்ற ஐயம் புலவன் உளத்திற் புகாது. நெருப்பின் சீற்றமும் வெப்பமும் அதற்கு ஆண்

தன்மை கொடுக்கின்றன. காற்று, ஒரு வகையில் மென்மையுடையதாயினும் வெகுண்டு முழங்கி மோதி அழிக்கின்ற ஆற்றல் பெற்றிருப்பதால் ஆணாகவே நினைக்கப்படும். ஆனல், நீரை மகளிருடன் ஒப்பிடலாம்; அதன் தண்மையும் மென்மையும் அவ்வொப்புமைக்குக் காரணகும். இஃதுண்மையாயினும், அலைவீசி அதிர்கின்ற கடலின் வலிமையையும் உவர்ப்பையும் நினைக்குங்கால் பெண்ணென்ற எண்ணமே வருதற்கிடமில்லை. ஆதலின், நீரினுங் கடல்நீர் ஆண் தன்மை யுடையதாகும். மேற்குறித்தவற்றை நினைவில் வைப்போமாயின், அங்கி, வாயு, வருணன் என்ற தேவர்கள் ஆண்களென்று கருதப்படுவதன் இயைபு நமக்கு நன்கு விளங்கும்.

இனிய, தெளிந்த தண்புனல் ஒழுகும் நல்யாற்றை எடுத்துக் கொள்வோமாயின், அதிற் பெண் தன்மை உண்டென்று உடனே யறியலாம். இனிமை, தண்மை, வளம் முதலிய பண்புகள் மெல்லியரை நினைப்பூட்டுகின்றன. அணைக்கப்படுவதால் ஆறு பயன்படுகின்றது. ஆற்றிற் கயலுண்டு; பெண்ணிற்குக் கயல்விழி யுண்டு. மேடுகளையுங் குன்றுகளையும் விலகித் தாழச் செல்கின்ற ஆற்றினோட்டம் மங்கையர் ஒதுங்கி நடத்தலை யொக்கும். இது இளங்கோவடிகள் கருத்து. பின்வரும் பாடலில் அதைக் காண்க.

"மருங்குவண்டு சிறந்தார்ப்ப மணிப்பூவாடையது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழிகாவேரி
கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்ததெல்லாநின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழிகாவேரி.

(சிலப்பதிகாரம். ஆற்றுவரி)

இதிற் காவிரியைச் சோழனது மனைவியென்று கூறியுளர். அன்றியும்,

அமர முனிவ னகத்தி யன்றனது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை, (மணிமேகலை, பதிகம் 11-12).

புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை யென்ற பொய்யாக் குலக்கொடி. (சிலம்பு, புறஞ்சேரி)

என்று புலவர் பலரும் ஆறுகளை நங்கையாகக் கொண்டனர். இதற்கிணங்க, மைசூரிற் காவிரியை அணைகட்டித் தடுத்திருக்கு மிடத்தில் (கண்ணம்பாடி) காவிரியினுருவமாக ஒரு கருங்கற் பெண் வடிவந் தோன்றுகின்றது; நாடோறும் அதற்கு வணக்க மும் நிகழ்கின்றது. கங்கையைப் பெண்ணென்று பேசும் வழக் கம் கன்னிமுதற் கைலாயம் வரை யாவரு மறிந்தது. ஆற்றை மங்கையென்று நவில்வது, அது முதலில் நங்கையா யிருந்தது பற்றியோ, அல்லது அது ஒரு மங்கையைப்போ லிருப்பது பற்றியோ? என்ற கடாவிற்கு விடை மேற்சொன்னவை கொண்டு எளிதி லறியப்படும்.

எல்லாவற்றையுந் தாங்குதல் பற்றியும் பல்வகை உயிர்களைத் தோற்றுவிப்பது குறித்தும் நிலமும் பெண்ணெனப்படும். 'இருநில மடந்தை' 'நானில மடந்தை' என்ற பெயர்களை நோக் குக. ஆறும் நிலமும் பெண்ணெனப்படுதல், அவற்றின் தன் மைபற்றி யன்றி வேறன்று. மயில் என்பது மங்கையருடன் பெரிதும் ஒப்பிடப்படும் ஒரு பறவை யாகும். அதன் குளிர்ந்த நிறங்களும் அழகிய வமைப்பும் நங்கையர் நினைவைக்கொண்டு வருகின்றன. ஆயினும், தையலரை நினைப்பூட்டும் மயில் பெண் மயிலன்று, ஆண் மயிலே. நிறத்திலும் அமைப்பிலும் பெண் மயில் அவ்வளவு அழகுடையதன்று. தோகை விரித் தாடும் ஆண் மயிலுக்கெதிரே பெண் மயிலின் தோற்றம் விரும் புந் தரத்ததன்று. எனினும், மெல்லியரைத் தோகையரென்று எல்லோருஞ் சற்றும் இடரின்றி மொழிகின்றனர். அழகும் இனிமையும் நிறைந்த விடத்து ஆண் தன்மை ஒழிந்து பெண் தன்மை மிளிர்கின்றது. இதனால், மயிலென்று பேசுங்கால் ஆண் என்ற நினைவே அற்றுப் போகின்றது. கிளிகளில் ஆணும் பெண்ணும் உண்டெனினும் கிளி என்று ஆணைக் கூறுமுறை எங்கணுமில்லை. நுண்ணிது உளப்பான்மை இதுவாதல் கொண்டு கல்வியையுஞ் செல்வத்தையும் மகளிராகப் பேசும் வழக்கின் அமைதி அறிக.

செல்வத்தைத் திருமகள் என்பர். நுட்பம், வனப்பு, சுவை முதலிய பண்புகள் மலிந்து யாவரையுந் தன்பால் ஈர்க்

கின்ற கல்வியை ஒரு மகளென்று கொண்டால், இன்பம் பல வளித்து எல்லோரையும் மயக்குகின்ற செல்வத்தையும் ஒரு பாவையென்று கொள்வது சரியே. இல்லறத்திற்கு மனைவி இன்றியமையாதவாறு செல்வமும் இன்றியமையாததே. கல்வி செல்வமாகிய இரண்டும் பொருளே; முன்னையது அகப் பொருள்; பின்னையது புறப்பொருள். அகப்பொருளைக் கலை மகளென்றவர், புறப்பொருளைத் திருமகளென்றார். திருமக ளைக் குறித்துப்பேச நேர்ந்த இவ்விடத்தில், அவளது கொழுந னாக விளங்குந் திருமாலையும் பற்றிச் சில சொல்வது கட்டாய மாகின்றது. பொருத்தம் பின்னர்ப் புலனாம். திருமகள் திரு மால் மார்பில் உறைகின்றாளென்பதும், திருமால் பாற்கடலிற் பள்ளிகொள்வன் என்பதும் புராணத்துட் கண்டவை.

"மாயோன்மேய காடுறை யுலகமும்"

என்று தொல்காப்பியர் கூறுதலால் திருமாலுக்குரிய விடங் காடே யாகும். காட்டின் இருண்ட பச்சை நிறமே திருமாலின் நிறமுமென்பது கருதத்தக்கது. இவ்வாறிருப்ப, திருமகள் கணவனைப் பாற்கடலிற் பள்ளிகொள்பவனாகக் கருதுவதேன்? என்று கேட்க நேரிடுகின்றது. இவ்வினாவைச் சற்று மாற்றி, 'காட்டிற்கும் பாற்கடலுக்குமுள்ள பொருத்தம் யாது' என்று கேட்போமாயின், எளிதாக விடை கிடைக்கலாம். காடென் பது முல்லை நிலம்; முல்லை நில மக்கள் இடையர்; இடையரது செல்வம் பால். முல்லை நிலத் தெய்வமாகிய திருமால் அந்நிலச் செல்வமாகிய பாலில் அமர்ந்ததாகச் சொல்வதில் ஒரு இயை பிருப்பதை யுணரலாம். அன்றியும், பாற்கடல் கடைந்த செய்தி திருமாலின் மேற்பார்வையில் நிகழ்ந்ததெனக் கூறுவர். மற்றும், திருமால் கண்ணனாக வந்த காலை, இடையரிடம் வளர்ந்து ஆனிரை காத்தான் என்ப. இவற்றிலெல்லாம் ஆழ்ந்த ஒரு பொதுக் கருத்தோடுகின்றது என்பது தெளிவு.

முல்லை நிலத்தைக் கார்காலமாகிய பெரும் பொழுதுடனும், மாலை நேரமாகிய சிறு பொழுதுடனும் சேர்த்துரைப்பது தமிழ்ப் புலவர் பின்பற்றிய முறை.

" காரு மாலையு முல்லை; குறிஞ்சி
கூதிர் யாம மென்மனார் புலவர் "　　(அகத்திணை—6)

என்பது தொல்காப்பியம். இதற்கிசைய,

" நனந்தலை யுலகம் வளைஇ, நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி, வலனேர்பு
கோடு கொண்டெழுந்த கொடுஞ் செலவெழிலி
பெரும் பெயல்பொழிந்த சிறுபுன் மாலை "

என்று நப்பூதனார் தாம் பாடிய முல்லைப்பாட்டில் (வரி. 1—6) நவின்றார். ஈண்டு முல்லை நிலத்திற்குரிய கார்காலமும் மாலை நேரமும் திருமாலோடு வந்தமை காண்க. கார் என்பது இருண்ட முகில் எழும்பி விண்ணை மூடியிருக்குங் காலத்தைக் குறிக்கும். காடு தழைத்துப் பொலிவு பெற்று விளங்குவது இக்காலத்திற்றான். காட்டிலுள்ள இடையர் சேரியில், மாலைப் பொழுதில் மேய்ச்சலுக்குச் சென்ற மந்தைகள் திரும்பி வரும். பகற்பொழுதெல்லாம் வீட்டிற் கட்டுண்டிருந்த கன்றுகள் தாயை நினைந்து கூப்பிடும் வேளையும் அதுவே. தீம்பாலுண்டு கன்றுகள் மகிழும் நேரமும் அஃதே. இவை காரணமாக, முல்லை நிலத்திற்கேற்ற பொழுது கார்காலத்து மாலையாகின்றது. மாலை என்ற சொல், 'மால்' எனும் முன்னிலையிலிருந்து தோன்றுவது (மால்=மயக்கம்.) ஆதலின், மாலை என்பது பொழுது மயங்குதலாயிற்று. திருமால் என்ற தொடரிலும் மால் என்ற சொல்லிற்கு இதுவே பொருள். இதனால், மாலைக்கும் திருமாலுக்குந் தொடர்புண்டெனத் தெரிகிறது. திருமால் என்ற சொல்லிற்கு, திருமகள் காதலில் மயங்கிக் கிடப்பவனென்றும், அடியாரை மயக்கித் தன்பாலிழுப்பவனென்றும் பலவாறு பொருளுரைப்பர். எங்ஙனங் கூறினும் அதில் மயக்கமுளது.

இஃதன்றி, மாயோன் என்ற திருமாலின் பெயரும் கருமையைக் காட்டும்.

" மாயோன் முன்கை யாய்தொடி கடுக்குங்
கண்கூடி ருக்கைத் திண்பிணித் திவவின் "
(பொருநராற்றுப்படை, வரி. 14—15)

இதனுள், யாழ்த்தண்டிலுள்ள வார்க்கட்டுகளுக்குக் கரிய நிறத்தை யுடையோனது முன்கையி லணிந்த தொடிகளை உவமையாக முடத்தாமக் கண்ணியார் கூறுகின்றார். (மாயோள்=கரிய நிறமுடையவள்) இதனால், மாயோள் என்று பேசப்படும் உமையவளுக்கும், மாயோன் என்று நவிலப்படுந் திருமாலுக்கும் ஒரு தொடர்புண்டாகின்றது. இங்ஙனம் பெண்ணைப்பற்றி யாமெடுத்துக் கொண்ட ஆராய்ச்சி இப்பொழுது மாயோளாகிய மலைமகளை யணுகி வருகிறது.

ஈண்டறிய வேண்டியது யாதெனின், திருமகளைப் போலவே திருமாலும் செல்வக் கடவுள் என்பதுதான். முல்லை நிலச் செல்வமாகிய பால் திருமாலுக்கு அமருமிடமாயிற்று. மாயோன் அடியார் தமது நெற்றியில் தாங்கும் குறியின் ஒரு பகுதியாய் விளங்குகின்ற வளைந்த வெண்கோடு பாற்கடலைச் சுட்டுமென்று சொல்வாருளர். காத்தல் திருமாலது தொழிலாயின், பாற்கடலைக் காட்டினும் அவனுக்கேற்றவிடம் பிறிதில்லை. காத்தல் என்பது வளர்த்தலாகும்; அதாவது, உயிர்களை வளர்த்தல். இது பெரும்பாலும் இடையாது தொழிலாவது ஊன்றி யுணரத் தக்கது. உயிர்கள் பிறந்தபின் அவை வளர்வதற்குப் பால் இன்றியமையாத தாதலின், காத்தற் கடவுளைப் பாற்கடலிற் பள்ளிகொண்டு, உயிர்களுக்கு வேண்டியவற்றை யளிப்பவனாகப் பேசுவது மிகுதியுந் தகுதியே. குட்டிபோடும் உயிர்களுக்கு இஃது ஒக்குமாயினும், முட்டையிற் பிறப்பவற்றிற்கு இது பொருந்து மாறென்னை? எனின்; முட்டையிலும் மஞ்சட்கரு, வெள்ளைக்கரு என இரு பகுதியுண்டு; இவற்றுள் மஞ்சட் கருவிலிருந்து உயிர் தோன்றுகின்றது; தோன்றிய உயிர்க்கு வெண்கரு உணவாகுமென் றறிக. ஆதலின், முட்டையின் வெண்கருவும் ஒருவகைப் பாலே யாதல் காண்க. பிணி வந்து மெலிந்தவர்களின் உடல் பலப்படுவதற்குப் பாலும் முட்டையுங் கொடுப்பது ஆங்கில வைத்தியத்தில் பெரிதுங் கையாளப்படுகின்ற முறை. இவற்றால், பாலின்றி வாழாதுயிர் என்று நினைக்கவேண்டிய ஒரு நிலைமையை நாமடைகின்றோம்.

பால் ஈதலும் முட்டை இடுதலும் உயிர்களிற் பெண் பகுதி

யின் பால் நிகழக் காண்கின்றோமே யன்றி ஆண் பகுதியில் நிகழக் காணோம். பிறப்பித்தலுங் காத்தலும் சிறப்பாக பெண் ணுக்குரியவை. ஆதலின், உலகத்தோற்றமும் வளர்ச்சியும் ஒரு பெண் கடவுளுக்குச் சேர்தலே ஏற்புடைத்தாகும். இங் ஙனமிருக்க, பாற்கடலையும் காத்தற்றொழிலையும் ஆண் கடவு ளாகிய திருமாலுடன் இணைத்ததேன்? இதைக் கருத்திற் கொண்டே பெண் தன்மைபற்றிப் பேசப்புகுந்த நாம் திரு மாலைக் குறித்து இடையிற் சிறிது நீண்ட கேள்வி நிகழ்த்த லாயிற்று. இதுகாறும் பார்த்தவற்றிலிருந்து அழகு, இனிமை, மென்மை, தண்மை முதலிய பண்புகள் பெண் தன்மைக்குப் பிறப்பிடமா யிருப்பது கண்டோம். உயிரை வயிற்றிற் றாங்கு தலும், பிறப்பித்தலும், பாலூட்டி வளர்த்தலும், கண் விழித் துக் காத்தலும் சிறப்பாய்ப் பெண்ணுக்குரிய வல்லவோ? திரு மால் என்ற கருத்தில் தாய்த் தன்மையே பெருகிக் கிடக்கின் றது. திருமாலின் உந்தித் தாமரையில் நான்முகன் தோன்றினு னென்பது, தொப்புளால் தாயொடு பிணைக்கப்பட்ட குழவியி னுருவத்தை நம்முன் கொணர்கின்றதன்றோ?

இம்முறையில் மலைமகளையும் கடல் வண்ணனையும் நோக் குங்கால் இருவரும் ஒருவரோ என்ற ஐயம் நிகழாமலிராது. மாயோன் மாயோள் என்று அவர்கள் அழைக்கப்படுவதாலும் இவ் ஐயம் வலியுறுகின்றது. கருமை, பசுமை, நீலமாகிய மூன்று நிறங்களும் மலைமகளுக்குந் திருமாலுக்கு முரியவை. அம்மை வணக்கமாகிய உமையவள் வணக்கமே திருமால் வணக்கமாக மாறிற்றென்று சைவர்கள் நினைக்கின்றனர். இதை,

‘அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே’

என்ற தேவார அடியிற் காண்க.

மங்கை பங்கனென்று நாமிங் கெடுத்துக் கொண்டதும், இனி விளக்கப் போவதுமாகிய சிவ உருவத்தில் உமையவளும் முக்கணனும் முறையே இடபாலும் வடபாலும் அமர்ந்திருக் கின்றனர். ஆனால், திருமால் தன் வலபாகத்திற் சிவனை வைத் தான் என்று வைணவர்கள் மொழிகின்றனர்.

'தொழும்பா லமரர்தொழும் வேங்கடவன் சுடர்நயனக்
கொழும் பாலனையொரு கூறுடையான்'

(திருவேங்கடத் தந்தாதி)

'வேங்கடவன் சுடர்க்கண்ணையுடைய சிவனை ஒரு கூறில் உடையான்' என்பது இதன் பொருள். ஈண்டுக் குறிக்கப்பட்ட ஒரு கூறு எக்கூறு என்பது, 'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து' எனும் ஆழ்வார் வாக்கினால் தெளிவாகின்றது. இங்கே காட்டிய மேற்கோளின்படி ஆண்களிருவர் ஒன்றுபட்டிருக்கின்றனர். இது,

'தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவுஞ் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து' (பேயாழ்வார்)

என்ற வெண்பாவில் வெளிப்படையாகக் கூறப்பட்டுளது. சைவப் பெரியாரும்,

'மால் ஒருபாகமாக மகிழ்ந்த நெய்த்தானத்தாரே'

(திருநாவுக்கரசு நாயனார்)

என்று புகன்றிருப்பதால், மாலுஞ் சிவனும் ஒன்று சேர்ந்த ஒருருவம் சைவ வைணவராகிய இருதிறத்தார்க்கும் ஒப்பாம். இடப்பாகமும், நீலம் அல்லது பச்சை நிறமும் பெண்ணிற்குரியன வென்பதைப் பின்னர்க் காண்போம். சிவனைப் பெருமானென்றும், திருமாலைப் பெருமாளென்றும் பொதுவாகப் பேசுவதில் முறையே ஆண்பால், பெண்பால் ஓசைகள் தோன்றுகின்றன. எங்ஙனமாயினும், 'அரியுஞ் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு' என்று வழங்குமொரு பழமொழியினுண்மை மங்கை பங்கனுருவத்திற் பதிந்து கிடக்கின்றது. (தொடரும்)

---

காழிக் கண்ணுடைய வள்ளலார் அருளிய

# நியதிப்பயன்

[வித்துவான் ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளை அவர்கள்]

[சிலம்பு ம, பரல் ௩, ௩௨௨-வது பக்கத் தொடர்ச்சி]

இருக்கு மிடஞ்சங் கடமாகி னும்மந்த காரத்தினு
மருத்துக் கொதித்தெழு வாதை யுறினெங் கணுமுகமாம்
பெருக்குமன் ணேதெனிற் குருவின் மூலம் பிறங்குபுற்று
நெருக்குஞ் சலக்கரை மீதினுங் கொள்ளுத னீதியதே. ௩௬

நீக்கிடு மண்ண தெதுவெனில் வானுக நேர்பலதாந்
தூக்கிடு மண்ணது தெங்கின் பழத்தின் ஞெருகுமளவாம்
போக்குஞ் சலக்கரை மீதிரு சாணெனப் போந்திருத்த
னேக்கலெல் லுத்தரந் தெக்கண மாக நுவன்றிடுமே. ௩௭

இடக்கர மீதிற் றருமண்ண தாமல கக்கனிமட்
டடர்த்தெழு மாநதி யாகி லெடுத்தருஞ் சுத்திசெய்த
றுடக்கருந் தாரைய தாய்விட லன்றிச் சுளகமதாய்த்
திடப்படச் சுத்திகள் செய்தல் வரமெனச் செப்பிடுமே. ௩௮

பகலினிற் பாதி யிரவினிற் செய்திடல் பங்கமுறு
மகமதிற் பீடை யிலங்கதிற் பாதி யெனவறிக
சகமதி லாற்றும் பிரம சரிவனந் தானடைந்தோ
னிகலரு மாவிர திக்குஞ்செய் சுத்தி யியம்புதுமே. ௩௯

இயம்புங் கிருகத்தன் றன்னி லிரட்டியு மும்மடங்கும்
வயம்பெற நான்மடங் காகவுஞ் செய்தல் வரன்முறையாம்
பயங்கொடு பாதங் கழுவிடிற் பூருவம் பார்த்தியற்றல்
சயம்பெறுங் கைவா யுமிழ்ந்திடி னுத்தரந் தான்முகமே. ௪௰

ஆசம னத்தி லிடப்பத நீரி லமுத்திவல
நேசம துற்றுமுன் னீள்கரை வைத்து நிகழ்த்துவதா
மாசக லத்திரு நீறணி யாவிடில் வன்பசியாத்
தேசுகொள் கௌவியந் தெக்கண மீர்சதஞ் செப்புகவே. ௪௧

அற்ப சலம்விடிற் சுத்திகள் செய்யு மடைவுரைக்கிற்
பொற்பமர் கான்மண் கொடுசுத்தி மும்முறை யேபுரிந்து
துற்பவஞ் செய்குறி மும்முறை மண்கொடு தூய்மைசெய்து
பிற்கரந் தன்னையு மிம்முறை சுத்தி பிறங்கச்செய்யே. ௪௨

இருகையுங் கூட்டி யிருகாற் கழூவி யிருபதம்பின்
றிருவுற வங்கிரு கான்மண் கொடுசுத்தி செய்திடுக
பெருகிடு சுக்கிலம் வீழி லிருகுணி தம்பெருக்க
மருவத வாயு நிகழிற் சலசுத்தி போல்மதியே. சங

தொங்தனற் காட்டம் பரித்த லிதயத் துறுமனுவாம்
புந்தியிற் சுத்தி பொருந்து மிடத்தின் புறவிருத்த
வந்தம தாமுகம் பூருவம் வீட்டி லமர்ந்திடுவோன்
றந்திரங் தேரும் விரதி வடமுகந் தானறியே. சச

அவ்விடை நோக்கற் கருகமல் லாதங் கவையுரைக்கிற்
கவ்வைகொ ணீசர் கழியுயிர் யாக்கை கருதசபை
யெவ்வம தான மலமதி சூகர மெண்சுணங்கன்
செவ்விய புட்ப வதிகர நாய்க்கடுங் தீம்பறுமே. சரு

உள்ளினிற் சுத்தி யுறுவித்துப் பின்வெளி யுற்றசுத்தி
கொள்ளுத றந்த மெதுமுத லென்றல் குறித்திடுவன்
தெள்ளிய ராசங் திகழ்தந்த மேல்முதற் சீர்வலமாய்
மெள்ளக் கொடுசெய்த னின்மலஞ் சேர்வரை வீற்றிருந்தே. சசு

விலக்கிய காட்டங் களிட்டிகை யாதி கொடுவிளக்கிற்
றுளக்கிடு மந்திரங் தெய்வ மிருடி தொகுபிதிர்க்கள்
கலக்க மிலாப்பல நல்காப் பராமுகங் கண்டிடுவ
ரிலக்கண மாந்திதி யல்லாது செய்யி லியம்புதுமே. சஎ

செய்தவன் முன்னிற் றலைமுறை யேழ்பிதிர் தீவினையால்
வெய்துறு முத்தி விரும்பினர்க் கென்றும் விதித்ததுவாங்
துய்யநல் வாய்கொப் புளித்தந்தச் சாதியிற் றாயகம்பை
மையறு வாணி மனுமூன்றி னுலபி மந்திரித்தே. சஅ

உரைத்தவத் தாலுவைச் சோதனை மெள்ள வுளுற்றுவதாங்
கரைத்தல மீதினில் வாய்கொப் புளிக்கிற் கருதிடமாங்
திரித்து வலத்தினிற் செய்திடிற் றீநர கிற்செறிக்கும்
விரைப்புனல் மீதுமிழ்ந் திட்டாற் பசாசுரு மேவிடுமே. சகூ

எண்விரற் கீழ்மண் ணெடுப்பதிங் கேதெனி லீரசுரர்
தன்னுட லாமிந்த மேதினி யெண்விரற் றாழ்விலில்லை
மண்ணுடற் பூசில் வருமுடற் பாவங்கண் மாறுமின்றேற்
கண்ணு ளுமலிக்கங் கொப்பென வேதங் கழறிடுமே. ருய

இருசெவி கண்ணினை மூக்கைப் புதைக்கி லிருந்திடுமிந்
திரிய மதிற்கன்ம சங்களென் றோது மிதயமதிற்
பெருகிய வத்திர தெய்வங் கருதிப் பெருமனுவை
மருவிட வோதிடில் வாசிக மானத மாறிடுமே. ௫௧

சிவதீர்த்தம் வைக்குமதேதெனி னீரிற் றிகழரவந்
தவநீக்கி மீன்முத லாஞ்சல செந்து சரிக்கையினு
லவநீக்கிச் சுத்தி யழுத்துவ தாமதற் பின்னர்மண்ணாற்
பவநீக்கி நீரிற் றெறிக்கிற் றிசாவிக்னம் பாறிடுமே. ௫௨

பின்னொரு கூற்றினை நீரில் வளையிற் பிறங்குசல
முன்னுறு தோடங்கள் போக்குமற் றொன்றை முறைமனுவாற்
சென்னியிற் கீழுடற் பூசிலிக் காயஞ் செறிந்தபவம்
அன்னிய மாமென வாகமம் யாவு மறைந்திடுமே. ௫௩

தென்றிசை நோக்கி யிருந்தங் குலர்துகில் சேர்த்தியற்றல்
அன்றியவ் வீரங் கொடுசிர மாதி யகந்துடைக்கிற்
கன்றிய ஞாளியி னுவுக் கிணையென்பர் கட்கமனு
வொன்ற புரோக்கணஞ் செய்தனற் காட்டி லுறுஞ்சுத்தியே.

ஈரத் துகில்புனைந் தேகரு மங்க ளியற்றுகினுந்
தேரிற் பலனுத வாதருந் தீவினை சேர்க்குமதற்
கோரற் புதமுற மீளவு நான முஞற்றியிடில்
வாரப் பலன்றருஞ் சுத்திய தென்று வகுத்தனரே. ௫௫

மற்றிரு தூசு புனைந்தங் கிருத்தல் வரன்முறையாம்
உற்ற நியதிக்கங் குத்தர நோக்க லுயர்சைவர்க்காம்
பற்றிடு முத்திபின் வைதிகர் பூருவம் பார்த்தியற்றல்
புத்திய தாமென வாகமம் யாவும் புகன்றிடுமே. ௫௬

ஆசன மேதெனிற் குக்குட வாசன மேயருக
நேச நிரீக்கண மிச்சைமெய்ஞ் ஞான நிகழ்கிரியை
மாசகல் பானு வருவன்னி யிந்து வளர்விழியால்
ஏசறப் பார்த்த லிதற்பயன் மேலு மியம்புதுமே. ௫௭

இரவியி னுற்சலத் தேதங்க ளேது மிலாதுணக்கி
விரவிய வன்னி விழியா லெரித்து விதுவமுதாற்
பரவிய வங்கி குளிரும் படிக்குப் பதித்திடுத
லரவு புரோக்கண மாவது மேலு முரைக்குதுமே. ௫௮

விந்து வமுதம் புரோக்கித்த நீர்சுத்தி மேவுதலான்
முந்துமத் தாடன மொக்க நிரைத்து முறைமையன்றி
வந்திடுஞ் சத்திப் பிரகாச மென்றும் வகுத்திடுவர்
பிந்தப்பி யுக்கண மாறு கிரியை பிறப்பித்தலே. ௫௯

தாளத் திரய மசுரரை யோட்டுந் தகைமையதாம்
நீளத்த திக்கினைப் பந்தனஞ் செய்வது நீடெயிலாங்
கோளத் தவகுண் டனமகிழ்ந் தியக் குறித்திடுவா
மீளச் சுரபி பொழிபா லமுத மவாவிடிலே. ௬௰

விப்பிர ராதிய மூவர் பிரம விதிநடப்ப
ரொப்பில்சற் சூத்திர ரத்திர முந்தி யுஞற்றிடுவர்
செப்பிய சந்தி யிரவி யிடத்திற் சிவன்றனக்குத்
தப்பற வத்திரத் தாற்றர்ப் பணஞ்செய்த ருனறியே. ௬௧

அருளத் திரமிகு பாவங்கள் சேதிக்கு மாயுதமாம்
பெருகும் விதிப்படி மூழ்கினர்க் கிங்ஙனம் பேசலின்றுந்
தருசுத்த வாச மனஞ்செய்த தாற்பயன் சாற்றிடுவன்
கருவுற்ற தத்வ மிருபத்து நாலுங் கழன்றிடுமே. ௬௨

வித்தியா தத்துவ மேழு மருஞ்சுத்தி மேவுமல்லாற்
சுத்த சிவதத் துவமைந்தின் மூன்றுமச் சுத்தியுறும்
வைத்திடுஞ் சத்தி சிவத்துக்குஞ் சுத்தி மருவலின்று
மொத்திடுஞ் சத்தி மனுலயத் தானமென் றோதிடுமே. ௬௩

ஓதுஞ் சிவதத் துவமதற் காரண முற்றிடலாம்
வேத மிருக்கு முதலிய மூன்றுக்கு மெய்ப்பயனுந்
தீதகன் முத்திரை கோகன்ன மாமெனச் செப்பிடுவர்
நீதமற் றேறக் கொளிற்சுரா பானத்தை நேரொக்குமே. ௬௪

நேர்ந்து குறைகொளில் வேதங்கள் ப்ரீதி நிரம்பியிடா
வார்ந்தகுப் யாந்தங் களாந்தஞ் சிகைநுனி மட்டதென்பா
ரார்ந்திடுஞ் சுத்தி யதிதெய்வ மாவ தயனெடுமால்
கூர்ந்த வுருத்திரன் மூவரென் றுகமங் கூறிடுமே. ௬௫

கூறுஞ் சுதாவெனிற் றெய்வப்ர சன்ன மெனக்குறிக்க
வூரி லதரந் துடைக்கி னுாகங்க ளெட்டினுக்குந்
தேறுமிங் யாசங் கட்கும் பயனெனச் செப்பிடுவர்
வேறு மதோமுக நீவிற் கணேசற்கு மேவிடுமே. ௬௬

மேவு மனுமிகை யங்குட்டத் தெய்வம் விளம்பியிடிற்
ருவு மமிர்த கலேயீ சுரனெனச் சாற்றிடுவ
ரோவுந் தொடுமிடந் தொட்டாலத் தானத் துறுசுத்தியுந்
தேவு மதிட்டத் திருத்தியு மாமெனச் செப்பிடுமே. ௬௭

தேருமத் தானந் தொடுதன் முகத்தினிற் றெய்வகங்கை
கூறு மிதழிற் பிரணவம் ப்ராணன் குறித்தறுண்டஞ்
சாரும் விழிகளிற் சந்திர சூரியர் சாற்றுசெவி
பூருவ மாகிய வெண்மரும் மேலும் புகலுதுமே. ௬௮

புகன்றிடு நாபி பிரம லுருத்திரன் பொன்னகல
மகன்றிடு தோள்க ளசுவினி தேவ ரருஞ்சிரமே
லுகன்றிடு மாலவ னுகு மமுத முயிரிறைக்குக்
குகன்றரு பத்ததி யித்திதி யாமெனக் கூறிடுமே. ௬௯

ஒருநிட்க நிட்கத் தரையு மிருநிட்க மேலரையுந்
தருவிப் பிரர்முதல் நால்வர்க் கணியுந் தகுதியென்பர்
வருசுத்தி செய்வது கற்ப முறையில் வராததனைப்
பெருகக் கலாசுத்தி செய்தது வாமெனப் பேசிடுமே. ௭0

பேசும் வடிவு பரைவடி வாமதிற் பேணியிடு
மீசனும் வன்னி யுருத்திர னுக வியம்புமலத்
தாசறு மீரறு தானப் பெயரு மணிபயனுந்
தேசும் புகழுங் குகபத் ததிதனிற் செப்புதுமே. ௭௧

செப்புஞ் சிரம்நெற்றி மார்பொடு நாபி செறிமுழந்தாள்
கைப்புய நீடிரு கைமுது கோடு கடிப்புறமு
மொப்பில் துவாதசத் தானம தாக வுரைத்திடுவர்
தப்பிலித் தானத் ததிதெய்வந் தம்மையுஞ் சாற்றுதுமே. ௭௨

சிரத்தினி லீசன் றிருநெற்றி கந்தன் றிருந்தருள்சே
ருரத்தினில் விண்டுநல் லுந்தியிற் றார்க்கை யுயர்முழந்தாள்
விரித்திடு மாரிட மாதர்க டோள்களில் விண்ணவர்கோன்
கரத்தினி னுக முதுகிற் பிதாமகன் கண்டுகொள்ளே. ௭௩

கடிப்புற மத்திர தெய்வம தாமிரு கைகடமி
லடுத்திடப் பூசிற்சர் வாங்கமுத் தூள மணிபலனும்
விடுத்திடு தோள்களிற் புண்டர மோரங் குலம்விடக்கிழ்
தொடுத்து மணிக்கரம் பூசுதல் வாதுளந் தொன்முறையே. ௭௪

அன்றியு நற்சிவன் சத்தி சதாசிவ னவ்வருளாம்
வென்றிகொள் வாமை முதற்சத்தி யொன்ப தெனவிளம்பும்
வன்றிற லேனைய தானங்க ளுக்கும் வகுத்தறிக
நன்றிகொ ளுலெட்டோ ரெட்டோ டஞ்சென நாட்டுவரே.

பின்பாச மித்தத னூற்பஞ்ச பூதங்கள் பேணுசுத்தி
யன்பான தீக்கையி னுலங் ககன்றிட் டிருக்கவது
முன்பாக நாடொறும் பூதங்கள்சுத்தி முயற்றுதல்போ
லின்பாமுத் தத்துவ மீளவுஞ் சுத்தி யியற்றுதலே. எசு

மானத நானத்தி னுடற் பிற்பவ மாய்ந்துவிடும்
ஈனம தான வசுசி யிடக்கையை யேர்திகழு
மூனமில் சுத்தி வலக்கையி னுலத் திரவுரையா
ஞான வனல்கொ டிருகாற் றுடைக்கி னவையறுமே. எஎ

சோதித்த பின்சுத்தி யான விடக்கரத் தால்வலக்கை
பேதித் தகம்புற மங்கொரு காற்றுடை பேசுபய
னுதித் தழலத னூற்சுட்ட தாக வறிந்திடுவா
யோதிப் பெருங்கரங் கூட்டுவ தின்னு முணர்த்துதுமே. எஅ

சத்தியத் தாலிரு கையினைக் கூட்ட றகுமமுதம்
வைத்தனல் வெம்மையை மாற்றி நனைத்தல் மலர்க்கரத்தி
லொத்த நியாசம தேதெனி லொண்கரச் சாயைகளுஞ்
சுத்திய தாகும் பொருட்டென வாகமஞ் சொல்லிடுமே. எகூ

சிருட்டி கிருகத்தன் செய்யும் பிரம சரிதியா
மருட்டிகழ் வானப் பிரத்தன்சங் யாசிசங் காரமதாங்
தெருட்டு நியாச மறிந்துசெய் யாவிடிற் றீவினையா
மருட்டறு மங்கத் துடன்கையு மொன்ற விசைக்குதுமே. அய

சத்தி சிவமய மான விருகையுந் தாங்குவித்துண்
மத்தியி லங்குட்டங் கன்னிகை போல வரைவரையா
யொத்திடு மெட்டு விரலையுந் தாமரை யொள்ளிதழாய்ப்
புத்தியிற் பாவிக்கை யாற்கை விசிட்டம் புகன்றிடுமே. அக

அக்கை விரலி லருமனு வைக்கு மடைவுரைக்கின்
மிக்க சிவனை வெளியி லருச்சனை மேவுவபோ
லொக்குமவ் வாசன மூர்த்தியை யங்கையி லோங்கவைத்துத்
தக்க சிவற்கு நிசித்திடல் போலிங்குத் தான்செய்தலே. அஉ

முறையங்கங் யாசத்தி னற்பய னேதெனின் முத்திதரு
மிறையங்க மாயன்றி யீசனைப் பூசிக்கு மேதுவின்றாங்
குறையங்க மேற்சிவ பாவனை செய்பொருட் டாய்க்குறித்த
னிறையங்க மான சிவாசன மூர்த்தி நிகழ்த்துதுமே. அங

உந்தியி னின்று மிதயாந்தஞ் சோடச முற்றதளப்
பந்தம தானவெண் டாமரை யாசனப் பாவகமாம்
நந்தலில் மூர்த்தி யிலாடாந்தஞ் சோதி நணுகுருவ
மூந்திய சூக்கும மூர்த்திய தாகவு முற்றிடுமே. அச

முற்று மிறைக்கு நியாசங்கள் செய்வது போல்முடித்துப்
பற்றறு மூலத்தி னற்பத மாதி பகர்சிரமட்
டுற்றிடு மந்திர மெல்லா முடலி லொருமைசெய்தல்
பெற்றிடு மாமுத் திரையென வாகமம் பேசிடுமே. அரு

சொல்லும் பிரமத்தைப் பீசங் குறைத்துச் சொலிற்றகித்து
வெல்லும் பவத்தைச் சடங்கத்தைத் தீர்க்கம தாய்விளம்பிற்
செல்லும் பரமுத்தி சேர வுகாரந் தெரிந்துரைக்கிற்
புல்லும் பராந்த முதலா வுடலுள்ளும் பூரிக்குமே. அசு

ஓதிப் பிரணவத் தாற்ப்ராண யாம முயர்மறையோ
ராதிய மூவர்க் கருகமவ் வாரியன் சாதகர்க்கு
நீதிய முக்கலை யஞ்செழுத் தானு நிகழ்த்திடுவர்
சாதிய சங்கிதை சற்புத் திரற்குஞ் சமயிக்குமே. அஎ

அகத்தினில் வாயு வசுசிய தாகையி னல்விடுத்துப்
புகப்புற வாயுத் திரித்திட லாகும் புகல்பலன்றான்
செகத்தினில் யாவ ரொருவரோர் கன்மஞ் செயுமிடத்து
மிகத்தன்னு ளத்தை யொருமித்துச் சாதிப்பர் மெய்யுறவே.

ஆங்கது போற்சந்திச் சத்தித் தியான மமர்பொருட்டு
வாங்கியவ் வாயு வடக்கில் மனதொரு மிக்குமதாற்
பாங்குறச் செய்வது சத்தப் பயனுயிர்ப் பாம்வெளியைத்
தீங்கறப் போக்கு வாத்தினைச் செய்த லெனச்செய்புமே. அகூ

செப்புமக் கையை விரித்து வலச்செவி சேர்த்திடுத
லொப்பில் செவியக் கினிமுதற் றேவ ருறைதலினு
லெப்பி லிரேசகம் பூரகஞ் சேர்கா மீறில்சுத்தி
தப்பறச் செய்பொருட் டாய்ப்பரி சிக்குந் தகைமைப்தே. கூ௰

பூரக மாதிய தாற்செயிற் போகம் புணர்த்தியிடு
ரேசக மாநின்று ரேசக மாதி நிகழ்த்தன்முத்தி
தாரக மாத்திரை யுத்தம மாதிய தானுரைக்கில்
ரேசக மாத்திரை பன்னிரண் டாமென் றியம்புவரே. ௬௧

பெருத்திடு பூரக மூவிரண் டாகும் பிறங்குகும்ப
மருத்திடு மூவெட்டு மாத்திரை யாகு மதுவதன்ம
மிருத்து மிரட்டி யிடையிதின் மூன்றறி லோவிசிட்டங்
கருத்துறு சந்தியிற் சிந்தனை வேறுறிற் காட்டுதுமே. ௬௨

காட்டு மசுரர் கலகத்தி னுற்பலன் காண்பதில்லை
நாட்டுங் குரவ ரறிவாற் கருதுவ நானுசந்தி
நீட்டு முதயத் திரவிப்ர காச நிகழுமுச்சி
கோட்டமின் ஞான மதிப்பிர காச மெனக்குறியே. ௬௩

குறிக்கு நிசிமுன் னமுத சலநிதி யோசைகொளல்
மறிக்கு மிரவி னடுப்பட வற்ற பெருகொளியா
மிறுக்கு மிதயம் புருவ நடுச்சிர மேலுமென்பர்
பொறிக்கின்ற சாதர் தாமிரண் டாகப் புகலுதுமே. ௬௪

சிவதன் மிணியாப் பரையினை முச்சந்தி தேர்ந்திடுவ
ரவர்பின் னுலோக தருமிணி முச்சந்தி யாய்ந்துகொள்வர்
பவமது தீர்ந்து பரமுத்தி யெய்தும் பலனதென்ப
ருவமையில் சங்கிதை யாற்கும்ப நீர்தலை யுற்றிடிலே. ௬௫

எய்து மமுத குடம்பொழிந் தாலொக்கு மீறில்சிரத்
துய்யும் புரோக்கண மாற்சனத் தாலுட னுற்றபவ
நய்யு மகமா மருடனத் தானுண் ணயந்தபவங்
கொய்யும் பினுமந்த ந்யாசப் பயனையுங் கூறுதுமே. ௬௬

இத்தகை ந்யாச மிதுசூக் குமவுடற் சுத்தியென்று
மொத்திடு கண்டிகை தன்னிற் செபிப்பவ ரோங்குமனுச்
சித்திய தாமள வுஞ்செபித் தாலென வுஞ்சிறந்த
நித்திய குண்டத் திலங்கியி லோமம் நிறைப்பவரே. ௬௭

ஆறிய வக்கினி தன்னைச் சொலிப்பித் தடிக்கடிநெய்
தேறிய வாகுதி செய்வது போற்றிறை யாநிசித்தல்
பேறியல் கையிற் செலவமு தாற்றனைப் பேணிச்சுற்றல்
கூறிய தர்ப்பண மந்திர திபன மாக்குறியே. ௬௮

கொள்ளுமத் தேவ ரிருடிகள் பூதங் குறிபிதிர்க்கள்
தெள்ளு மவர்கள் திருத்திப் பொருட்டெனச் செப்பிடுவர்
விள்ளு மனுவைச் சுவாவெனி லிச்சை மிகுகிரியை
யுள்ளிய ஞானம் பிரகாச மாமென் றுணர்ந்துகொள்ளே. ௬௬

ஓதுஞ் சுதாந்த முனமுறைத் தோநம வோதிலொன் றும்
பேத மினிமந் திரஞ்சம பாகம் பெறும்வவுஷட்
டேதமி லந்தப் புறக்கர ணப்பல மெய்தியதா
னீத முறுந்தெய்வந் தன்னை யழைத்தலென் னீதியதே. ௬௭

வஷடந்த மாவ துபாசித்த தெய்வம் வசீகரித்த
விசைகொள் படந்தம தெவ்விக் கினத்தையு மீண்டடர்த்த
விசமந் நிபந்தக் கரமாதி கேசரி நீள்விலங்கு
நசைதரு மாதுட்ட செந்துக்கள் யாவையும் நாசமதே. ௬௮

ஆதலி னுலிது கூட்டி மனுவை யறிந்துரைத்துப்
பேதமி லாத நியாசக் கிரியைகள் பேணியிடி
லேதமி றேவவிக் னங்களுஞ் சாந்தியை யெய்தியிடுந்
தீதக றேக மதிற்சிவ சாநித்தஞ் சேர்ந்திடுமே. ௬௯

சூரியன் றன்னை நமஸ்காரம் பண்ணிற் றொடர்பிணியின்
வீரிய மான வியாதியெ லாமறு மேன்மறுமைக்
கோரிய லாமுத்தி யுற்றிடு மென்ன வுரைத்திடுவர்
காரிய மாநிய திப்பயன் மாணவ கண்டுகொள்ளே. ௭௦

நியதிப் பயன் வினாவிடை முற்றிற்று.

---

## இதுவரை கிடைத்திருக்கும் வள்ளல் நூல்கள்

கண்ணுடைய வள்ளலார்:—

ஒழிவிலொடுக்கம்
மாயாப்பிரலாபம்
சிவாநந்த மாலை
பிராசாத விருத்தம்
பஞ்சாக்கர மாலை
ஞானசாரம்
தத்துவ விளக்கம்

திருநெறி விளக்கம்
நியதிப் பயன்
சட்டைநாதர் தோத்திரம் Etc. (ധ)

சட்டைநாத வள்ளலார்:—
சதாசிவ ரூபம் (க)

சுயம்பிரகாசவள்ளல்:—
சிவப்பேறு
ஐக்கியவியல்
சிவாநந்த மாலை (6 செய்யுள்) (ங).

சிவஞானவள்ளலார்:—
சத்தியஞான போதம்
பதிபசுபாச விளக்கம்
சித்தாந்த தரிசனம்
உபதேச மாலை
சிவஞானப் பிரகாச வெண்பா
ஞான விளக்கம்
அத்துவிதக் கலிவெண்பா
அதிரகசியம்
சிவாகமக் கச்சிமாலை
கர்ணாமிர்தம்
சுருதிசார விளக்கம்
சிந்தனை வெண்பா
நிராமய வந்தாதி
அறுபத்துநாலு சங்கை
தசவழக்குச் சிந்தனை
குருமரபு சிந்தனை
அநுபவ சந்திரிகை
திருமுகப் பாசுரம்
அதிகாரப்பிள்ளை அட்டவணை
மரபட்டவணை. (உഥ)

ஆக நூல் ஙஎ.

# திருக்குறள் மாட்சி*

ஒரு மனிதன் பிறந்த நாள் முதல் உலகத்தில் வாழ்ந்து இறக்கும் வரையிலும் மற்றவர்களோடு ஒரு தொடர்பை உடையவனாக விருக்கின்றான். குழவிப் பருவத்தில் தாய் தந்தையர் மாட்டுத் தொடர்புற்றும், வளர வளர உடன்பிறந்தாரோடும், பள்ளிப்பருவத்து உடன் கற்றாரோடும், மண முடிந்த வழி மனைவி மக்கள் மாட்டும் இன்னும் ஒக்கல், நட்பினர், ஊரினர், நாட்டினர் என்ற இத்தொடக்கத்தாரோடும் ஒவ்வொரு வகைத்தாய தொடர்பு கொண்டு வாழாநிற்கின்றான். ஆகவே இத்தொடர்புகளை நீக்கி ஒருவனை இத்தன்மையன் இக்குணத்தன் எனத் தூக்கித் துணிதலியலாது. அப்படியே ஒருவன் இத்தொடர்புகளினின்றும் நீங்கி யிருந்தாலும் அவனுயிர் உலக அனுபவங் கிட்டாததனால் மாசு தீர்ந்து முன்னேற்ற மடைய ஏதுவில்லா தொழிகின்றது. எனவே, இத்தகைய தொடர்பு கொண்டும் இத்தொடர்புடனும் வாழ்வதே மனித வியற்கை என்பது பெறப்பட்டு யாவர்க்கு மொப்ப முடிந்ததொன்றாம்.

மேற்குறித்த பல்வேறுவகைத் தொடர்பு பெற்றானொருவனுக்கு ஒவ்வொரு தொடர்புடையார் மாட்டும் அவன் இன்னவாறு ஒழுகுதல் வேண்டும் என்று கற்பிக்கும் நூலே யாவற்றினு மேம்பட்ட நூலாகும். அதுவே உயிர்களை உய்விக்கும் பான்மையுடையது. ஆயின், அப்பெற்றித்தாய நூல்தான் யாதெனின், அதுவே திருத்தகு சீர் தெய்வத் திருவள்ளுவர் அருளிய ஒப்புயர்வற்ற மாணிக்கத் "திருக்குறளாகும்"; என்னையோவெனின், கருவி நூல்களும் கலைஞானங்களும் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத் துணையவாயினும், அவையனைத்தையும் தராசின் ஓர் தட்டிலிட்டு, உயிர்க்குறுதி பயப்பதாய திருக்குறட் செந்தமிழ் நூலை மற்றோர் தட்டிலிட்டால் திருக்குறள்

* இஃது இப்பொழுது அண்ணாமலைச் சர்வ கலாசாலைத் தமிழ்ப் பேராசிரியராக விளக்கும் சுவாமி விபுலாநந்தர் அவர்கள் 1923-ஆம் ஆண்டில் செய்த ஒரு சொற்பொழிவின் சாரமாகும்.

தட்டு பொருட் சிறப்பினுல் தாழ்ந்து நிற்குமெனல் மிகை யாகாது.

இனி, மேற்கூறிப்போந்த தொடர்புகள் யாவற்றிலும், ஒரு நாயகனுக்கும் நாயகிக்குங் காதன் மிகுதியாலுண்டாகுந் தொடர்பே மிகச்சிரிய தொன்றும். இச்சீர்மையையும் சிறப்பி னையும் உள்ளுதொறுள்ளுதொறுமுள்ள முருக்குமாறு எடுத்துக் காட்டியது தெய்வத்திருக்குறளின் மூன்ருவது பகுதியாகிய காமத்துப்பாலாகும். விருந்தினர் சுற்றத்தார் நட்பினர் என்ற வித்தொடர்புடையார்மாட்டு ஒழுகவேண்டிய முறையை யெழில் பெற விளக்குவது அறத்துப்பாலுள் முதன்மைய தாகிய இல்லற வியலாகும். இனி, ஒரு நாட்டின் குடிகளி லொருவனுய் ஒரு மனிதன் அரசனிடமும் இதர குடிமக்களிட மும் நடந்து வரவேண்டிய முறைமையினையும், அவ்வாறே அர சன் அமைச்சர் முதலாயினேர் குடிகளிடத்தியற்ற வேண்டிய கடமைகளையும், நன்ருடெனக் கருதப்படல் வேண்டின் ஓர் நாடு இன்னின்ன விலக்கண முடைத்தா யிருத்தல் வேண்டுமென்ப தையும், மற்று மின்னேரன்ன சிறப்பியல்புகளை விளங்கக் கூறு வது நடுவணதாகிய பொருட்பாற் பகுதி. மனிதனுக்குரிய ஒழுக் கங்களெல்லாம் மேற்கூறிய பகுதிகளிற் பரவா நிற்கும். மேல் நாட்டாரும் இப்பாகுபாட்டினையே பின்பற்றிப் பண்டை நாண் முதல் தனித்தனி நூலியற்றுவாராயினர். வட நூலாரு மிவ்வாறே தரும சாத்திரம், அர்த்த சாத்திரம், காம சாத்திரம் என வெவ்வேறு சாத்திரஞ் செய்வாராயினர். இவை முறையே திருக்குறளின்கண் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலை யுணர்த்தும். எனினும், இம் முப்பொருளையும் ஓரிடத்தே இயைபச் சேர்த்து விரிக்கற்பாலதை விரித்தும், சுருக்கற் பாலதைச் சுருக்கியும் அரும்பெறல் மணிகளை யோர் சிறு பேழையினகத்துப் பொற்புற வைத்தாங்குக் கவின்பெற மிளிரு மிவ் வருமைத் திருக்குறள் போன்ற ஒரு நூல் எம்மொழியிலும் காண்பதரிது. எப்பாலவர்க்கும் எவ்வெக்காலத்தும் உயிர்க் குறுதி பயப்பனவாய பொருள்களை இன்புற விளக்கி அவரை யுய்விப்பதே இத்தொன்னூலின் மாட்சி.

இனிப் பொருட் பாகு பாட்டினை அறம் பொருள் இன்பம் வீடாதிய நான்கென நூல்கள் ஓதவும், திருக்குறளின்கண் முதன் மூன்றையுமே ஓதி நான்காய வீடு கூறு தொழிந்தது ஓர் குறை யன்றுலோவெனின், அற்றன்று; முப்பாலின் நாற்பாலுங் கூறியதே அந்நூற் சிறப்பாகும் என விடுக்க. "அறம் பொரு ளின்பம் வீடென்னு மந்நான்கின் றிறந்தெரிந்து செப்பிய தேவை" யென்றும், "முப்பாலில் நாற்பான் மொழிந்தவர்" என்று மெழுந்த ஆன்றோர் கூற்றுனு மவை யுணரற்பாற்று. விளங்க வுரைக்கின் "வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்து". அஃது இலக்கணவகையாற் கூற வொண்ணு தாகலின் நூல்கள் வீட்டியல்பைக் காரண வகையாலும் எடுத் துக்காட்டு வகையாலு முணர்த்துப. அவ்வாறே திருக்குறள் அறத்துப்பாலின் பிற்பகுதியாகிய துறவறவியலில் வீட்டியல் பைக் காரணவகையாற் கூறினர் ஆசிரியர். பின்னும் அத னையே காமத்துப்பாலில் எடுத்துக்காட்டுவகையா னெடுத்து விதந்தோதினரென்பதே அறிஞர் துணிபு. காமத்துப்பாலிற் பொலிவுறுங் குறட்பாக்களின் நயங்களைப் பருப்பொருள் கொண்டு பார்க்கினும் அவை வியக்கத்தக்கனவாம். அற்றாயின், அவையே இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள நேயத்தையும் ஆன்மா இறைவனோடு கலந்தனுபவிக்கும் நிரதிசயானந்த வின் பத்தையும் குறிப்பாற் காட்டி நிற்கின்ற திறத்தையுமுற்று நோக்குவார்க்கு அது பெரு மகிழ்ச்சியைத் தருமென் பது திண்ணம். இச்சிறப்பின்பப் பொருளைக் கூறவே அகப் பொருணூல்கள் தமிழின்கண் எழுந்தன. தெவிட்டா இன் பத் "திருச்சிற்றம்பலக் கோவை" யாரும் மணிவாசகரருள் வாய்ப்பிறந்து அகப்பொருளிலக்கியத்துத் தலைசிறந்து நின்றது. அதன் அருமை பெருமைகளை "ஆரணங்கா ணென்ப ரந் தணர்.........செப்பிடினே" என ஆன்றோர் வியந்து கூறினர்.

இனி, ஆசிரியர் பொருட்பாலுட் கூறிய அரசியல் அமைச் சியல் முறை முதலானவை இக்காலத்திற்கு முரித்தாகுமோ வெனின் முற்றும் உரித்தாகாது. கால வேறுபாட்டினால் அரசி யன் முறை வேறுபடுமாகையால் ஆண்டுக் கூறியவற்றுள் பிற்

கால முறைகளுக்கொத்தன பலவுள; ஒவ்வாதனவும் பலவுள. மூற்காலத்தைய வாசியன் முறையைக் கண்ணுடிபோற் கவின் பெறக் காட்டுவது இப்பொருட்பால். ஆயினும், இக்காலத் தேலாதனவு முண்டென்று கூறினமையால் அதன்கண் கொள்ள வேண்டுவன கொண்டு தள்ள வேண்டுவனவற்றைத் தள்ளி ஒழுகுவதே அறிவமிந்த மாந்தர் கடன். ஆகவே, முதலுங் கடையுமாய் நின்ற அறத்துப்பாலிலும் காமத்துப்பாலிலுங் கண்ட வுண்மைகள் எக்காலத்து மழிவுறாது முக்காலத்தும் பயன்பெற விளங்கி நிற்கும் நிலையின வென்பது, நடுவணதாய பொருட்பாலில் கூறப்பட்டது. காலமேகவேக வியற்கையால் ஓரொவிடத்து மாறுபடுவன வென்பதும் உய்த்துணரற் பாற்று.

பொருளை அகம் புறமென்று வகுப்பதே தமிழர் மரபா யிருக்க, ஆசிரியர் அறம் பொருள் இன்பம் என முப்பாற் படுத்த தென்னையோவெனின், அவர் வடநூல் வழக்கு பற்றிப் பிரித்தாரென்பதே. இதுவே உரையாசிரியரின் கருத்துமாதல், அவர் உரையிற் காண்க. தேவர் குறள் தமிழுமறையென் றும், உத்தரவேதம் என்றும் அழைக்கப்படும். ஆகவே, அது ஆரிய வேதத்தைப் பின்பற்றியதென்பது பெறப்படும். திரு வள்ளுவ மாலையின்கண் சங்கப்புலவர்கள் நூலை வியந்தோதிய பாக்களானும் இஃது வலியுறுத்தப்படும். உண்மை இதுவே யாக, ஒரு சாரார் ஆரிய வேதம் வேறெனவும், திருக்குறள் அவ்வேத சம்பந்தமின்றித் தனித்தாக்கப்பட்டதென்றுங் கூறு வர். இதற்குத் தக்க சான்றுகள் அக்காலத்தும் பிற்காலத்து மெழுந்த நூல்களிற் பெறுமாறில்லை. இதை விரிக்கிற் பெருகும். ஆகவே, எல்லாக் கலைஞானங்களுக்கும் வேதம் எப்படி முதநூலாயிற்றே அப்படியே வள்ளுவர் அருளிச்செய்த திருக் குறட் பெருநூலுக்கும் அவ்வேதமே முதனூலெனத் துணியற் பாற்று. நூலகத்தேயும் இக்கூற்றை வலியுறுத்தப் போதிய சான்றுகள் உள.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry—உருவரைக் கணக்கு

[திரு.பா.வே. மாணிக்கநாயக்கர்—காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

செம்மையாக வளர்ச்சியுற்ற பிறநாட்டு மொழிகள் எவ்வொன்றிலுங் காணப்படும் வேர்ச்சொற்கள் ஒவ்வொன்றிற்குந் தமிழ் மொழியில் ஏற்ற வேர்ச்சொற்கள் இருக்கின்றன. எனவே பிறமொழிச் சொற்களைத் தமிழில் தற்பவமாகவாவது தற்சமமாகவாவது எடுத்தாண்டு தமிழின் உயர்தனிப் பண்பைக் கெடுக்க வேண்டியதில்லை. அன்றியும் தமிழிலேயே ஆக்கப்படும் சொற்கள் தாமே எளிதிற் பொருளுணர்த்துவனவாயும் தமிழ் மாணவர்கள் கற்றுப் பொருளுணரவல்லனவாயும் இருக்கும். பிறமொழிச் சொற்களைக் கற்றுப் பொருள் தெரிவதைவிட தமிழ்ச் சொற்களைக் கற்றுப் பொருள் தெரிதல் தமிழ் மாணவர்கட்கு மிகவும் எளிதாகும் என்று கூறவும் வேண்டுமோ? தமிழில் ஆக்கப்படுஞ் சொற்கள் முதலில் இனிமையற்றவையாயும் விநோதமாயுந் தோற்றினும் நாளாவட்டத்திற் பழக்கமுற்று உயர்வையெய்தும். ஆங்கில "எஞ்சினீயரிங்" துறையில் "ஆண் திருகு" "பெண் திருகு" என்று வழங்கப்பட்டுவருஞ் சொற்களைவிட இழிவான சொற்களை வேறெம் மொழியிலுங் காண்டற்கூடுமோ? அவ்வாறிருந்தும் அவைகளும் தற்போது செம்மையான அறிவியற் சொற்களாக அத்துறையில் வழங்கப்படவில்லையோ? அத்தகைய இழிசொற்கள் தமிழின்கட் பயிலாவண்ணம் "அவையில் கிளவி மறைந்தனர் கோடல்" என்று தமிழிலக்கணம் அரண் கோலிற்றிலையோ?

இனி, தமிழிலுள்ள வினைமுதற்பதங்கள் பெயர் முதற்பதங்களைவிட நன்கனம் சொல்லாக்கத்திற்குப் பயன் படுவனவாயிருப்பதால் அவற்றையே அறிவியற் சொற்களை ஆக்குவதிற் கையாளுதல் வேண்டத் தக்கதாகும். இதைப் பின்பற்றி, இப்பொழுது "ஜியாமெட்ரி" என்ற உருவரைக் கணக்குத் துறைக்குரிய சொற்களைக் கணிப்போம். கீழே குறிக்கப்படும் சொற்

களைவிட சிறப்புடையனவாயும் ஏற்றனவாயும் பல சொற்கள் இருப்பதாகத் தோற்றுமாயினும் அவை இத்துறையில் எவ்விடத்தும் பயன்படக் கூடியனவா என்பதை யாய்ந்தே அவற்றைத் தேர்ந்து கோடல் வேண்டும் அவ்வாராய்ச்சியிற் றேறுமிடத்துக் கீழ்வருஞ் சொற்கள் ஏற்றனவென்பதே எம் துணிபு.

Point புள்ளி அல்லது குற்று

இவையிரண்டிற் பின்வரும் குற்று என்பது வினைமுதற் சொல்லாகையால் அதுவே சிறந்ததாகும். மேலும் அது அறிவியற் பொருள அமைக்கப்பட்டதோர் சொல். குறை, குறுக, குற்றி முதலிய சொற்களுக்கு "குற்று" என்பதிலுள்ள "குற்" என்பதே வேராகும். குறைத்துவிடு, சிறிதாக்கு, உருவே குறையும் வரையிற் குறுக்கு என்பதே அதன் உட்கிடை. நீட்சி, அகற்சி என்பது போன்ற பருவுருவில்லா ஒன்றே "குற்று" என்பதாம்.

Line கோடு அல்லது வரை

இவை யிரண்டில் "வரை" யென்பதே சிறந்தது; அறிவியற் பொருட்செறி வமைந்தது. வரி, வரிதல், வரைதல், * வருவுதல் முதலிய சொற்களுக்கு வர் என்பதே ஒலி வேராகும். வர் என்றால் ஒரு குற்றிலிருந்து மற்றொரு குற்று அல்லது பல குற்றுகள்மட்டும் வரைவது என்பதே பொருள்; எனவே உருவரைக் கணக்கில் Line என்றால் குற்றுச் செல்லும் வழி என்பதே பொருளாகும்.

| | |
|---|---|
| Straight Line | நேர்வரை |
| Straightness | நேர்மை |
| Curved Line | நெளிவரை |

Curve என்பதற்கு வளைவு என்று பொருள் கொள்ளலாகாதோ எனின் ஆகாது; Flexion என்ற சொல்லின் பொருள் உள்ளொலிக்கின்றமையால்.

---

* இச்சொல் தனித்தமிழேயாகும்; வின்ஸ்லோ துரைமகனார் எடுத்தாளாததற்கேது காண முடியவில்லை.

Curve　　நெளிவு
Flexion　　வளைவு
Contra flexion　　எதிர்வளைவு
Angle மூலை அல்லது முடக்கு

முடக்கு என்பதே ஆட்சிமுறை நோக்கிக் கோடற்குரியதாம். இது பின் வருவனவற்றால் விளங்கும்.

Acute Angle　　கூர் முடக்கு
Obtuse Angle　　விரி முடக்கு
Right Angle　　செம்முடக்கு; முழுமுடக்கு

(Right என்பதற்குச் செம் என்று பொருள் கொண்டாலும் முழு என்று விளக்கப்பொருள் கொண்டு முழுமுடக்கு என்று எடுத்தாளுதலே அறிவியற் கேற்றதாகும்.)

Angular figure　　முடக்கு வடிவம், முடக்கி
Triangle　　மும் முடக்கி
Quadrangle　　நான் முடக்கி
Pentangle or Pentagon　　ஐம் முடக்கி
Hexangle or Hexagon　　அறு முடக்கி
Septangle or Septagon　　எழு முடக்கி
Octangle or Octagon　　எண்முடக்கி
Non-angle or Nonagon　　ஒன்பான் முடக்கி, தொன்[முடக்கி
Dectangle or Decagon　　பதின் முடக்கி
Dodecagon　　பன்னிரு முடக்கி
Polyangle or Polygon　　பன்முடக்கி
Equiangle　　சரி முடக்கி
Equiangle Triangle　　சரிமும் முடக்கி
Rectangle　　செம்முடக்கி, முழுமுடக்கி

Rectangle என்பது நான் முடக்குகளும் செம்முடக்காக அமைந்த ஒரு வடிவமேயாகும். உருவரைக் கணக்குப்படியோ அது நான் முடக்குகளோடு கூடிய ஒரு வடிவமேயாகும்; எனவே செம்முடக்கி எனக்கூறுதல் ஏற்புடைத்து. முடக்குகளின் எண்ணிக்கையைக் குறித்தல் வேண்டா; முழுமுடக்கு கொண்ட

ஒரு உருவம் நான்கு முடக்குகளையே உடையதாயிருத்தல் இன்றியமையாதாகலின்.

| | |
|---|---|
| Interior angle | உள் முடக்கு |
| Exterior angle | புற முடக்கு |
| Entrant angle | நுழை முடக்கு |
| Re-entrant angle | உள் நுழை முடக்கு |
| Equiangular | சரி முடக்கிய |
| Altitude | உயரம் |
| Altitude of triangle | மும்முடக்கி யுயரம் |
| Alternate | ஒன்றுவிட்ட, இடைவிட்ட |
| Alternate angles | இடைவிட்ட முடக்குகள் அல்லது ஒன்றுவிட்ட முடக்குகள் |
| Corresponding | நிரலான |
| Corresponding angles | நிரல் முடக்குகள் |
| Vertex | நுனி, உச்சி |
| Vertex of angle | முடக்கு நுனி |
| Vertical | செங்குத்தான, நெட்டுக்குத்தான, நிமிர்ந்த |

நிமிர்ந்த என்பதே சிறந்தது; வினைமுதற் சொல்லாயும், ஒரே வேர்ச்சொல்லோடு அமைந்ததாயும் இருப்பதோடன்றி "கீழிருந்து மேனோக்கி நேரே எழுகின்ற" என்ற பொருளைப் பயப்பதாயு மிருக்கிறது. Vertical என்பதற்கு அதுவே நேர்பொருள்.

| | |
|---|---|
| Vertical line | நிமிர் வரை |
| Pendulum | தொங்கடம், தொங்கட்டான் |
| Perpendicular | தொங்கு, தூங்கு |
| Perpendicular line | தூங்குவரை |

தூங்குவரை யென்றதனால் "மேலிருந்து கீழ்நோக்கித் தொங்கும் வரை" என்ற உட்பொருள் ஒலிக்கின்றது. உருவரைக் கணக்கில் Perpendiculars என்றால் மேலிருந்து கீழ்நோக்கித் தொங்குவனவே என்ற நியதியில்லாமையால் பிறிதொரு ஏற்ற

தமிழ்ச் சொல்லே அமைத்தலே நேரிது. Perpendicular என்பதற்கு ஒரு குற்றிலிருந்து மற்றொரு வரைக்கு இழுக்கப்படும் குறைந்த அளவுடைய கோடு என்பதே பொருளாகலின் பொதுவாக குறுவரை என்று சொற்கொள்ளலாம். தூங்கு வரை என்பதை மேலிருந்து கீழ்நோக்கி வரும் வரைக்கே சிறப்பாகக் கொள்ளலாம்.

| | |
|---|---|
| Opposite | எதிர் |
| Opposite angles | எதிர் முடக்குகள் |
| Arm | கை |
| Arm of angle | முடக்கின் கை |
| Base | அடி |
| Base of a triangle | மும் முடக்கியடி |
| Reflex | பின் முடங்க, பின் முடக்கம் |
| Reflex angle | பின் முடக்கு |
| Forward angle | முன் முடக்கு |

Regular என்ற சொல்லுக்கு உருவரை கணக்கைப் பொறுத்த வரையில் முறை என்பதே பொருள்.

| | |
|---|---|
| Figure | வடிவம் அல்லது வடிவு |
| Regular Figure | முறை வடிவம், முறை வடிவு |

Regular Pentagon முறை ஐம் முடக்கி (பிறவும் இவ்வாறே அமைத்துக் கொள்க).

| | |
|---|---|
| Irregular | முறையில் (லாத) |
| Irregular figure | முறையில் வடிவம் |
| Adjacent | அடுத்த |
| Adjacent angles | அடுத்த முடக்குகள். |

Diagonal என்றால் முடக்குகளின் ஊடே என்று பொருள்பட்டு எதிர்முகமான இரண்டு முடக்குகளூடே செல்லும் ஒரு வரையைக் குறிக்கும். எனவே முடக்குருவி அல்லது முடக்குருவரை எனச் சொல்லலாம். (தொடரும்)

---

# கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு

[திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்]

[சிலம்பு ம, பரல் க, உகூ-வது பக்கத் தொடர்ச்சி]

இருமைஅன்மை என்பது உளவாய இருவேறு அறிவுப் பொருள்களுக்குள் பிரிப்பில்லாத கலப்பினு லுண்டாகும் ஒன்றுபட்ட தன்மையாகும். அதனுல் பொருண்மையால் வேருய் நிற்கும் நிலையும் கலப்பினுல் ஒன்ருய் நிற்கும் நிலையும் பெறப்படுகின்றன. கடவுளும் உயிர்களுமாகிய இருவேறு அறிவுப் பொருள்களில் நிறைவு அறிவுப் பொருளாகிய கடவுள் குறைவு அறிவுப் பொருள்களாகிய உயிர்களை உயிர்க்கு உயிராய் நின்று இயக்குந் தன்மையும் உள்ளதால் உடனுய் நிற்கும் நிலையும் பெறப்படுகின்றது. அத்துவிதம் என்னும் சொல்லுக்கு இங்ஙனம் கூறும் பொருளுக்கு மாருக கேவலாத்துவிதம் (Monism) கூறும் ஒற்றுமைக் கொள்கையர்கள் (அபேத வாதிகள்) ஆகிய ஸ்மார்த்தர்கள் நகர உயிர்மெய் உபசர்க்கத்தில் நகர ஒற்றுக் கெட்ட அகரத்துக்கு இன்மைப் பொருள் கொண்டு தனியே ஒன்ருய் நிற்கும் நிலையையும், துவிதம் (Dualism) கூறும் வேற்றுமைக் கொள்கையர்கள் (பேத வாதிகள்) ஆகிய மாத்துவர் அந்த அகரத்துக்கு மறுதலைப் பொருள் கொண்டு தனியே வேருய் நிற்கும் நிலையையும்; விசிட்டாத்துவிதம் (Qualified dualism) கூறும் வேற்றுமை ஒற்றுமைக் கொள்கையர்கள் (பேதாபேத வாதிகள்) ஆகிய வைணவர்கள் அந்த அகரத்துக்கு இன்மைப் பொருள் கொண்டு தனியே உடனுய் நிற்கும் நிலையையும் கொள்கின்ருர்கள். அவர்கள் மூவரும் தாங்கள் தாங்கள் கூறுங் கருத்துக்களை விளக்க முறையே 'பொன்னும் பணியும்' 'இருளும் வெளியும்' 'சொல்லும் பொருளும்' என்ற உவமைகளைக் கூறுகின்ருர்கள். ஆசிரியர் மெய்கண்டதேவர் அவர்கள் கூறும் மூன்று உவமைகளும் சுத்தாத்துவித மூன்று நிலைகளுக்கும் பொருத்தமான உவமை

கள் அல்ல என்று ஏதுக்களுடன் மறுத்து, ஒன்றாய் நிற்கும் நிலைக்கு 'உடலும் உயிரும்' என்ற உவமையும் வேறாய் நிற்கும் நிலைக்கு 'அகரமும் ஏனைய எழுத்துக்களும்' என்ற உவமையும் உடனாய் நிற்கும் நிலைக்கு 'பண்ணும் ஓசையும்' 'பழமும் இரதமும்' என்ற உவமைகளும் கூறி மூன்று கொள்கையர்களும் கூறுகின்ற மூன்று நிலைகளும் ஒருமையுற்றுத் தன்கண் அடங்கியும் தான் அவைகளுக்கு மேற்பட்டும் நிற்கும் சுத்தாத்துவித உண்மையை விளக்கி நிலைநாட்டுகின்றார். அவர் கூறுவன வெல்லாம் இங்கே விரித்துச் சொல்ல இடம் போதாது.

## IX. அத்துவிதப் பொது இயைபின் மூன்று நிலைகளது இயைபு

௧௭. ஒன்றாய் நிற்கும் நிலை, வேறாய் நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலை ஆகிய இந்த மூன்று நிலைகளில் ஒன்றுக் கொன்று உள்ள இயைபு கூறுமிடத்து அவைகள் மூன்றிற்கும் அடிப்படையாயுள்ளது கடவுளும் உயிர்களும் கலந்து நிற்கும் கலப்புத் தன்மையாகும்; இந்தக் கலப்பே மூன்று நிலைகளையும் இணைப்பதாகும். இருவேறு அறிவுப் பொருள்களும் கலவாமல் இந்த மூன்று நிலைகளும் உளவாகா. கலப்புக்குப் பின் முதலாவது ஒன்றாய் நிற்கும் நிலையும், பின் வேறாய் நிற்கும் நிலையும், இந்த இரண்டு நிலைகளும் சேர்ந்தபின் உடனாய் நிற்கும் நிலையும் முறையே உண்டாகின்றன. ஒன்றாய் நிற்கும் நிலையிலும் வேறாய் நிற்கும் நிலையிலும் கடவுள் மக்களுடன் கலந்து இயைபு உடையவனாகின்றான். உடனாய் நிற்கும் நிலையில் கடவுள் நுகர்வுப் பொருளிலுங் கலந்து நின்றும் மக்கள் அந்நுகர்வுப் பொருள்களை வேட்கைசெய்யவும் அறியவும் கவர்ச்சி(attraction)செய்தும் அவற்றிற் சென்று நுகரும்படி செய்கின்றான். கடவுளுக்கும் மக்களுக்கும் உள்ள அத்துவிதப் பொது இயைபில் இந்த மூன்று நிலைகளும் இல்லாதனவானால் அவர்கள் உலகில் நுகர் பொருள்களை நுகர்ந்து அன்புப் பெருக்கமும் அறிவுப் பெருக்கமும் செயற்றிறனும் அடைந்து முடிவில் வீட்டின்பம் (சிவபோகம்) நுகர்வதற்குத் தகுதி உடையவர்களாக மாட்டார்கள்.

## X. அத்துவிதப் போது இயையும் உலகவழக்கும்

கரு. இனி அத்துவிதப் பொது இயைபு உண்மையில் அடங்கியுள்ள மூன்று நிலைகளும் உலகவழக்கில் வைத்துக் காட்டுவாம். இக்காலத்து அரசியலார் (Governments) தங்களுடைய ஆட்சியில் வாழுங் குடிகளுக்கு யாதாம் ஒரு நலம் செய்யவேண்டுமானால் முதலாவது அவர்களிடத்தில் ஒன்றுபட்ட அன்பு வைத்து அந்நலத்துக்கு வேண்டுவன வகையறச் சூழ்ந்து துணிந்து ஒரு சட்டம் செய்தலினால் ஒன்றாய் நிற்கும் நிலையையும், பின் அச்சட்ட முறைகளைக் குடிகளுக்கு அறிக்கை வழியாயும் பத்திரிகை வழியாயும் நேராயும் அறிவித்தலினாலே வேறாய் நிற்கும் நிலையையும், கடைசியாக அச்சட்ட முறைகளைத் தாங்கள் திட்டஞ் செய்த பணியாளர்களைக் கொண்டு குடிகள் பின்பற்றி ஒழுகும்படி செய்வித்தலால் உடனாய் நிற்கும் நிலையையும் உடையவர்களாகின்றார்கள். கல்வி கற்பிக்கும் ஆசிரியன் ஒருவன் மாணாக்கன் ஒருவனுக்கு அவனிடத்தில் அன்புடையவனாய் ஒன்று பட்டியைந்தும் அவன் அறிவு நிலையை அறிந்து வேறாய் நின்று அறிவித்தும் அறிவித்த வண்ணம் நடைமுறையில் ஒழுகச் செய்வித்தும் முறையே ஒன்றாய் நிற்கும் நிலையையும் வேறாய் நிற்கும் நிலையையும் உடனாய் நிற்கும் நிலையையும் உடையவனாகின்றான். இவ்வாறே உலகில் நிகழ்கிற ஒவ்வொரு தொழிலினும் ஒன்றாய் நிற்கும் நிலை வேறாய் நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலை ஆகிய மூன்று நிலைகளையும் நாம் காணலாம். ஒருவனைத் தனித்து நோக்குமிடத்தும் அவனிடத்தில் வேட்கை வலி, அறிவு வலி, செயல் வலி மூன்றும் ஏறக்குறைய ஒத்திருந்து நேர்மை அடைந்தாலொழிய அவன் தனக்குப் பயன்படும்படியாயுள்ள செயல் ஒன்றும் செய்தல் முடியாது. வேட்கை மாத்திரமிருந்து அதனை நிறைவேற்றுதற்கு வேண்டிய அறிவு இல்லாதிருந்தால் அவ்வேட்கையால் யாதொரு நற்பயனு முண்டாகாது. வேட்கையும் அறிவுமிருந்தும் செயல்முறையில் ஒழுகுந் திறனில்லாதிருந்தால் அவ்வேட்கை அறிவுகளால் யாதொரு நற்பயனு முண்டாகாது. அறிவுக்கும் செயலுக்கும் பெரிதும் இடையீடு இருத்தலினாலன்றோ

கல்வி கற்று உயர்ந்த தேர்வுகள் தேறின பலர் இக்காலத்தில் உலகில் நல்லொழுக்க மில்லாதவர்களாயிருக்க நாம் காண்கின்றோம்? மேலே கூறியவாற்றால் அத்துவிதப் பொது இயைபு உண்மை எத்துணை உலக வழக்குக்கும் இயற்கை நிகழ்ச்சிக்கும் பொருத்தமாயுள்ளது என்பது தெள்ளிதிற் புலனாகும்.

(தொடரும்)

---

# இளையான்குடிமாற நாயனார் நாடகம்

[ஆசிரியர் அ. வரத நஞ்சைய பிள்ளை, ஜலகண்டபுரம்]

(௱௩௪-வது பக்கத் தொடர்ச்சி.)

இப்பிரபஞ்சம் தானே யுண்டாயிருக்குமா? காரணமில்லாமல் காரியமில்லை. இது நமது தினமான அநுபவமல்லவா? இதற்கொரு காரண கர்த்தா இருக்கவேண்டும். உடலைவிட்டு விட்டு உயிர் நீங்குவதால் உடலின் வேறாக உயிர் உண்டு என்பது நிச்சயம். ஆகவே உடலில் அவ்வுயிர் எவ்வாறு சேர்ந்தது? தன் இச்சையாய்ச் சேர்ந்ததானால், தானும் தன் சுற்றத்தாரும் உற்றாரும், துன்பமுற அது பிரியாமல் இருக்க வேண்டுமன்றோ? துக்கங்களை நீக்கி வேண்டியவாறு சுகத்தையே அநுபவிக்கலாமல்லவா? அவ்வாறில்லாமையால், உடலில் உயிர்களைச் சேர்ப்பதும், போகங்களைப் புசிப்பிப்பதும், ஒரு காரணத்தினால் அவற்றை வேறு பிரிப்பதும் தனக்குவமான மில்லாத தலைவன் செயலேயாகின்றது. கருணைத் தடங்கடலாகிய எம் பெருமான், இங்ஙனம் பல வுயிர்களுக்கும் பலவித சுகதுக்க பேதங்களை விளைப்பதற்கு முக்கியமான காரணமிருத்தல் வேண்டும்; அதுவே வினை (கர்மம்) என மேலோர் தீர்மானித்திருக்கின்றனர். இங்ஙனம் புகையைக் கொண்டு நெருப்பை அநுமானிப்பதுபோல் பிரபஞ்சத் தோற்றங்களைக் கொண்டு கடவுளுண்மையை நிச்சயிக்க வேண்டியிருக்கிறது. காட்சிக்குட்பட்ட பொருளால் காட்சிப்படாத பொருளை நிச்சயிப்பதுவே அநுமானம். இதினும் மேம்பட்டதாய்க் காட்சிக்குப் புலனாகாததாய் நிற்பவற்றை பேரறிஞர்கள் நுணுகி யாராய்ந்து அநுபவித்த வுண்மைகளை நமக்குணர்த்தும்படியாக அருளிச்

செய்துள்ள நூற்களைக்கொண்டு அறிவது சத்தப்பிரமாணம். இவ்வகை அளவைகளால் விசாரிக்கும்போது, உயிரும் கடவுளும் என இருபொருட்கள் விளங்குவதோடு, உயிரைப் பந்தப்படுத்தும் இயல்பான, அறியாமை (அஞ்ஞானம் அல்லது ஆணவம்) என்றொன்றும் இருப்பதாக உறுதிப்படுகிறது. இனி, எத்தன்மையினர் கடவுள்? எத்தகையது மெய்ச்சமயம்? எவ்வகையின நாம் வாழ்நாளிற் செய்பத்தக்க கடமைகள்? என்பவற்றைத் தொடர்ந்து ஆராயலாம்.

உலகில் பலவித மதங்களும், பற்பல கடவுளரை நாட்டித் தனித்தனி கூறித் தமது சமயமே மேலானதென்கின்றன. உடலையும் உலக இன்பத்தையுமே பொருளென்னும் உலோகாயதமும், ஞானமே பொருள், அது கணந்தோறும் அழிந்து சந்தானமாய்த் தொடரும், அச்சந்தானம் முற்றக் கேடுறுதலே வீடுபேறு எனக்கூறும் பௌத்தமும், கடவுளை நோக்கிக் கடுந் தவம் புரிந்து தன்முயற்சியே காரணமாக ஆகாயத்தின் மேனோக்கிச் சேறலே வீடுபேறு என்னும் ஆருகதமும், பரமாணுக்கள் ஒன்றோடொன்று திரண்டு உலகைத் தோற்றுவிக்கும் என்னும் தார்க்கிகமும், கடவுளே வேண்டா, வினைகளே வீடு பேறளிக்கும் என்னும் மீமாம்சமும், வினையே வேண்டா ஞானமே சாலும், நான் பிரமமே என்னும் மனோதிடமே மோட்சந்தரும் என்கிற மாயாவாதமும், மூலப்பகுதியையும் புருட தத்துவத்தையும் மாத்திரம் உடன்படும் சாங்கியமும், உலகு, உயிர், வினை, ஞானமென வேறில்லை, பிரமமொன்றே எல்லாமாகி வேண்டியவாறு விளையாடி எல்லாம் செய்கின்றது என்னும் கிரீடாப் பிரமவாதமும், இன்னும் பற்பல வுரைத்துப் பெருகும் ஏனைச் சமயங்களும் ஒன்றோடொன்று முரணி நிற்கின்றன. இம்மதங்கள் கூறுவன உண்மையற்றனவு மல்லாது முழு உண்மையுடையனவு மல்லாது யானைகண்ட குருடர் உரை போல்வன. பல திறப்பட்ட சமயக் கோட்பாடுகளையும் ஒரு சமயம் தன்கட் காட்டி, அவற்றில் அடங்காத சிறந்த முடிபையும் தான் கொண்டு விளங்குமானல் அச்சமயமே மிக உயர்ந்த மெய்ச்சமயம் என்பதில் ஐயப்பாடிராது.

ஊன்றி ஊன்றி அறிந்து பல சமய நூற்களையும் படித்துக் காணும் தத்துவங்களெல்லாம் சைவ சமயத்தின்கட் காணப் படுகின்றன என்றும், அச்சமயங் கூறும் சிறந்த கோட்பாடு ஏனைச்சமயங்கள் எதிலும் காணப்படவில்லை யென்றும், அத னாலே அஃது சித்தாந்த மென்னும் தனிச் சிறப்புப்பெயரால் அழைக்கப்படுகிறதென்றும், பல சமயமும் நாடித்தேர்ந்த நூல் வல்லோர்கள் மெய்ச்சுகின்றார்கள். பல ஆறுகளும் பாய்கின்ற பெருங்கடல்போல் எல்லாச் சமயவாதிகளின் முடிபுகளும் அதன்கண் அமைந்து கிடைப்பதாலன்றோ "சைவ சமயமே சமயம்" "சைவத்தின் மேற் சமயம் வேறிலை" என ஆன்றோர் கள் அறுதி கூறுவாராயினர். எந்த மதத்தையும் நிந்திக்கும் கருத்து அச்சமயத்தில் இல்லை. ஒருவன் எவ்வகைக் கீழ் நிலை மையிலிருந்தாலும், நாளடைவில் மேல் நிலைமைக்கு வரும்படிக் கருணை யுருவாகிய கடவுள் துணைநிற்கின்றார் என்னும் இச் சமயத்தின் கண்ணுக்கு எல்லாச் சமயங்களும் அவரவர் உண் மையை அறிதற்கும் மேன்மேல் அறிவு வளர்ச்சி யெய்துவதற் கும் வேண்டற்பாலன ;வென்று கருதுவதால் ஒருநிகரானவே. ஒருவன் எந்த மதத்தில் அன்புகொண் டொழுகினும் படிப்படி யாய் உண்மை விளங்கிக் கடைசியில் இச்சமயத்தைத் தானே நாடிவந்து சேர்வான் என்பது அச்சமயத்தின் உயர்ந்த துணிபு. எல்லா வுயிர்கட்கும் இறைவன் ஒருவனே யாதலின் யாவர் எந் தக் கடவுளை வழிபடினும் அவரவர் மனச் செம்மைக்கும் நிலைக் கும் தக்க பயனை அவரே யருள்கின்றார்; எல்லாவுயிர்களும் அத் தனிப் பெருங் கடவுளின் கருணைக் கையால் அணைத்துக் காக் கப்படுகின்றன; தோன்றாத்துணையாக நின்று அப்பெருமானார் நமக்குச் செய்து வருகின்ற எண்ணிறந்த நன்மைகளை எண்ணி யெண்ணி அடங்காத அன்பு மேலீட்டால் நாம் நாடோறும் சுகம் நண்ணலாம். அன்பு பெருகினால் இன்பம் பெருகும் என்பது அச்சமயத்தின் அசைக்க முடியாத உறுதித் தீர் மானம். இங்ஙனம் பத்தி செய்யும் மெய்யடியார்களைப் பணிந்து உபசரிப்பதாலும் நற்கதி பெறலாமென்பது அம் மதத்தின் கட்டுரை. எல்லா வுயிர்களையும் கோவிலாகக்கொண்டு

இறைவன் அவற்றினுள் உறைகின்றான்; ஆகையால் எல்லா ஆன்மாக்களிடத்தும் அன்பாயிரு, எவற்றிற்கும் துன்பம் செய்யாதே என்பதே அச்சமயத்தின் முக்கியமான உபதேசம். இப்படிப்பட்ட சிரிய மெய்ச்சமயத்திலேயே எனக்குப் பற்றுண்டாகிறது. நாம் இவ்வுலகில் காணும் எல்லாப் பொருட்களிலும் இறைவன் கலந்து கரந்துறைகின்றான் என்றால், நான் அவனை எவ்வாறு மறக்கக்கூடும்? (பாடுகின்றார்.)

நீகேதகுரா என்ற வர்ணமெட்டு

இராகம் காம்போதி—தாளம் ஆதி

பல்லவி

நானோ மறவேன் நாளும் காட்சி கண்டு
நானோ மறவேன்

அநுபல்லவி

வானில் இரவிமதி காணில் அவருடைய
மேனி இதுவெனவே பூணும் அறிவுடனே (நானோ)

சரணம்

பாரும் அனலுமிகு நீரும் வளியுமெதிர்
நேரும் உயிருமவர் சேருமிட மெனவே (நானோ)

மானை யணிகரப்பெம் மானை மலைமகள்பு
மானை எமது பெருமானை யொரு கணமும் (நானோ)

நன்று. இம்மட்டும் நான் அறிந்தது போதும். மேல் அறிய வேண்டியதும் இராது. வெறும் வாய்ஞானம் என் செய்யும்? செய்தாலன்றோ சிறப்பு; ஆம், நான் இனிச் செய்யக் கடவது யாது?

(தொடரும்)



காளையார் கோயில் (கானப்பேரூர்.)



திருவிற்குடி.